# தேவேந்திரன்

*முனைவர் செ. இராஜேஸ்வரி* **M.A., M.Phil., Ph.D.,**

*சந்திரோதயம் பதிப்பகம்*
***3/462 முதல் மாடி, கம்பர் 2வது தெரு, கம்பர் சாலை,***
***தினமணி நகர், மதுரை – 625 018, Mob. : 7010997639.***

## நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | தேவேந்திரன் |
| துறை | : | தமிழ் இனம், பண்பாடு |
| ஆசிரியர் | : | முனைவர் செ. இராஜேஸ்வரி |
| வடிவமைப்பு | : | செ. மீனாட்சி |
| பதிப்பாளர் | : | சந்திரோதயம் பதிப்பகம்<br>3/462 கம்பர் 2வது தெரு, முதல் மாடி,<br>கம்பர் சாலை, தினமணி நகர்,<br>மதுரை – 625 018<br>தொலைபேசி எண் : 7010997639 |
| பதிப்பு | : | முதல் பதிப்பு 2020 |
| மொழி | : | தமிழ் |
| பக்கங்கள் | : | 111 |
| விலை | : | Rs.150/- |

- - - - -

| | | |
|---|---|---|
| *Book* | : | *Devendran* |
| *Subject* | : | *Tamil Community, Religion* |
| *Author* | : | *Dr.C.Rajeswari,M.A., M.Phil., Ph.D.,* |
| *Designer* | : | *C. Meenatchi* |
| *Publisher* | : | *Chandrothayam Pathippagam*<br>*3/472 Kambar 2nd Street, First floor*<br>*Kambar Salai, Dinamani Nagar*<br>*Madurai – 625 018*<br>*Phone : 7010997639* |
| *Month of Publish* | : | *2020* |
| *Pages* | : | *111* |
| *Price* | : | *Rs.150/-* |

# அணிந்துரை

**கலைமாமணி முனைவர் தே.ஞானசேகரன்**
*பேராசிரியர் மற்றும் தலைவர்*
*தமிழ்த்துறை*
*பாரதியார் பல்கலைக்கழகம்,*
*கோயம்புத்தூர் – 641 046*

*தொல்காப்பியர் அகத்திணையில் கருப்பொருள் பற்றிக் கூறுகையில் தெய்வத்தையும் அதனுள் அடக்கிப் பேசுகின்றார். அதாவது பாலை ஒழிந்த ஏனை நான்கு நிலங்களுக்குத் தெய்வங்களை,*

**“மாயோன் மேய காடுறை உலகமும்**

**சேயோன் மேய மைவரை உலகமும்**

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலென**

**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே”**

*என்று வரையறை செய்வார். இந்த நான்கு திணை நிலத்தெய்வங்களில்* **மருத நிலத்தின் கடவுளை வேந்தன் என்று தொல்காப்பியர் குறித்திருக்க**

உரையாசிரியர்கள் ***"மருத நில வேந்தனை இந்திரனென்றே"*** குறிப்பிடுகின்றனர். மருத நில வேந்தன் எப்பொழுது இந்திரன் ஆக்கப்பட்டான்? இந்த மாற்றத்திற்கான சமூக, வரலாற்றுப் பின்புலம் என்ன என்பதை வருமாறு காண்போம்.

## ஆரியர்களின் இந்திரனும் தமிழர்களின் வேந்தனும்

தொல்காப்பியர், மருத நிலக் கடவுளை வேந்தன் என்று குறிப்பிட்ட இளம்பூரணர், நச்சினார்க்கினியர், நாவலர் சோமசுந்தர பாரதியார் முதலியோர் வேந்தன் என்பதற்கு இந்திரன் என்றே உரை கூறுகின்றனர். இங்கே வேந்தன் என்ற பெயருக்கு மாற்றாக இந்திரன் என்ற பெயரை உரையாசிரியர்கள் குறிப்பிடக் காரணம் என்ன என்ற ஒரு கேள்வி எழும். தொல்காப்பியர் காலத் தமிழர்களின் இறைவழிபாடு முன்னோர்களை வழிபடும் ***(Ancestoral cult)*** வழிபாட்டு மரபினைக் கொண்டது என்பதை நாம் இங்கே நினைவு கூர வேண்டும். **"இந்த நால்வகை நிலத்துத் தெய்வங்களும் அந்தந்த நிலத்து மக்களுக்கும் துணை செய்த வீரர்களின் தலைவராக இருக்கலாம்"** என்று சாமிசிதம்பரனார் குறிப்பிடுவதும் இங்கே கருதத்தக்கது. இத்தகு தமிழர் முன்னோன் சேயோன் – ஸ்கந்தன் ஆனது போல வேந்தன் இந்திரனாக ஆக்கப்பட்டான் என்று கருதலாம். இது மட்டுமல்ல இப்பெயர் மாற்றத்திற்கு ஆரியர்களின் மருத நில

மழைக்கடவுளின் பெயர் இந்திரன் என்பதும், ஆரியர்களின் பண்பாட்டுத் தொடர்பு தமிழகத்தில் ஏற்பட்டபோது தமிழர்களின் மருத நிலை மழைக்கடவுளான வேந்தனும் இந்திரன் என்றே அறியப்பட்டிருக்க வேண்டும் என்றும் கருதலாம். காரணம் இலக்கிய வழக்கை விட உலக வழக்கே எல்லோராலும் ஏற்றுக்கொள்கிற வழக்காக மாறும் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. இதனை மறைமலையடிகள் வருமாறு விளக்குவது அறியத்தக்கது:

"ஆரியர்களின் இந்திரன் இடி, மழை, மின்னல் முதலியவற்றிற்குரிய தெய்வமாதலோடு, அவர்தம் பகைவரோடு போராடுங்கால் அவருக்கு உதவிபுரிந்து வெற்றியைத் தருபவனாகவும் அவருக்கு சோமபானம் (மது), விலங்கின் இறைச்சி போன்றவற்றை உட்கொண்டு அவர் வேண்டிய நலன்களையெல்லாம் அவருக்கு விளைவிப்பவனாகவும் சொல்லப்படுகின்றான். **"தமிழர் வணங்கிய இந்திரனோ (வேந்தன்) வயலும் வயல் சார்ந்த இடமுமாகிய மருதநிலத்தில் உள்ள உழவர்களால் மழையின் பொருட்டு மட்டுமே வணங்கப்பட்ட மழைக்கடவுள் ஆனான்".** மழையின் பொருட்டாகவன்றி வேறெந்த நன்மை பொருட்டாகவேனும் தமிழர்களால் வணங்கப்பட்டவன் அல்லன். இவருக்கு வேதத்திலுள்ள பாட்டுக்களில் மூன்றில் ஒரு கூறு இந்திரன் மேற்

செய்யப்பட்டிருத்தல் போல தமிழ் நூல்களில் இந்திரன் என்னும் சொல்லே காணப்படவில்லை.

மருத நிலத்து மக்களால் கொண்டாடப்பட்ட தெய்வம் வேந்தன் என்று சொல்லப்படுகின்றது. தமிழர் மழையின் பொருட்டாக வணங்கிய இந்திரனும் ஆரியர் மழையின் பொருட்டாக வணங்கிய இந்திரனும் மழைக்கடவுள் ஆதல் பற்றிப் பிற்காலத்தவரால் அவ்விருவரும் ஒருவராக கொள்ளப்படுவராயினர். அவ்வாறு கொள்ளப்படினும் தமிழர்க்குரிய வேந்தனுக்கும் இருக்கு வேத ஆரியர்க்குரிய இந்திரனுக்கும் ஏதோவோர் இயைபும் இல்லையென்பதும் நன்கு விளங்கும். உற்று ஆராயுங்கால் தமிழர்க்குரிய வேந்தன் என்போன் தமிழர்க்குள் முதன் முதற் தலைவனாய் தோன்றி மழை பெய்யும் காலமும் அம்மழையினுதவியாற் பயிர் செய்தற்கேற்ற வளவிய நிலமும் அந்நிலத்தைத் திருத்திச் செவ்வனே பயிர் விளைவிக்கும் வகைகளும் நன்குணர்ந்து உழவுத் தொழிலைக் கற்பித்து தமிழ் மக்களை மேல் நிலைக்குக் கொணர்ந்தவன் ஆதல் வேண்டும் என்பதும் புலப்படும். நன்றி செய்த முன்னோரை நினைத்து அவர்களைப் பரவுதல் (வழிபடுதல்) தமிழர்க்கு இயற்கையாதலால் அவர் கால்வழியில் வந்த மருதநிலத்து உழவர் முதல் வேந்தனான அவனது ஆவியை வேண்டி வணங்குவர் ஆனார் என்பார். இதிலிருந்து

பண்டைய மருதநில மக்கள் வணங்கிய வேந்தன் அவர்களது குல முன்னோன் என்பதை உணரலாம்.

## தமிழ் இலக்கியத்தில் இந்திரன் குறித்த செய்திகள்

சங்க இலக்கியங்களில் குறிப்பாக பரிபாடலில் இந்திரன் வானுலகத் தேவர்களின் அதிபதி, *"**துறக்கத்து அமரர் செல்வன்" (பரி 5-59)**, "**வானத்து வளங்கெழு செல்வன்" (பரி 5-59)**, "**அருநிலை உயர் தெய்வத்து அணங்கு" (பரி 8-12)**, "**விண்ணோர் வேள்வி முதல்வன்" (பரி 5-30)** என்று பலவாறாகப் புகழப்படுகின்றான். திருமுரு காற்றுப்படையில் '**ஆயிரம் கண்களையுடையவன்' (155), (241)** என்றும் காட்டப்பட்டுள்ளது. வேந்தன் இந்திரனான பின் அவன்மீது புனையப்பட்ட தெய்வப் புனைவுகள் இவை என்பதை நாம் அறிந்திட முடியும். இதல்லாமல் மழையுடன் தொடர்புபடுத்திய பல வழக்காறுகள் அக்காலத்திலிருந்ததை அன்றைய சங்கப் புலவர்களும் தமது பாடல்களில் பதிவு செய்திருப்பதை அதாவது வானவில்லை இந்திரனுடன் தொடர்புபடுத்தி **"இந்திரவில்" (புறம் 20, அகம் 84)**, "**விசும்பின் வில்" (அகம் 192)**, "**அச்சிறக்கால் ஆர்த்து அணிமழை கோளின்றே வைச்சிறத்தான வானவில்லு" (பரி 18)** என்று பதிவு செய்துள்ளதைப் பார்க்க முடிகிறது. சங்க இலக்கியம் பரிபாடலில் இந்திரன் குறித்த பல செய்திகள் தொன்மங்களாக இடம் பெற்றிருப்பதை*

*காண்கின்றோம். இதே பரிபாடலின் 19ம் பாடலில் தான் இந்திரனை அகலிகையுடன் தொடர்புபடுத்தும் ஒரு தொன்மம்.*

***“இந்திரன்**, **பூசை**, **இவள் அகலிகை**, **இவன் சென்ற கவுதமன்”*** *என்றவாறு சொல்லப் பட்டுள்ளது. அதே காலகட்டத்தில் பேரூர்களில் இந்திரனுக்கு விழா கொண்டாடி வந்ததை ஐங்குறுநூறு (62)*

***“இந்திர விழாவிற் பூவின் அன்ன***

***புன்தலைப் படை வரிநிழல் அகவும்”***

*என்ற அடிகளின் மூலம் அறிகிறோம்.* ***பதிற்றுப்பத்து*** *கூறும் செய்தி ஆகும். ஐங்குறுநூறும், பதிற்றுப்பத்தும் இந்திரவிழாவை மருதநிலத் தெய்வத்தின் விழாவாகவே குறிப்பிடக் காண்கிறோம். இதற்குப் பின்னர்* ***சிலம்பு**, **மணிமேகலை*** *இந்திரவிழா பெரிய அளவாக நடத்தப்பட்டதைப் பதிவு செய்கின்றன. அதிலும் வழக்கிழந்த அல்லது மறக்கப்பட்ட இந்திர விழாவை அகத்தியன் ஆணையின்படி தூங்கெயில்* ***எறிந்த தோடித்தோட் செம்பியன்*** *காவிரி பூம்பட்டினத்தில் கொண்டாடினான் என்று சிலம்பு கூறும்.* ***சிலம்பு குறிப்பிடும் இந்திர விழா “பசியும் பிணியும் நீங்கி**, **வசதியும் வளனும் கரக்கென” (சிலம்பு)**, “**வானமும் மாரிபொழிக! மன்னவன் கோள்நிலை திரியாக் கோலோன் ஆகுக”***

***மணிமேகலை (விழாவறை காதை)*** *என்றவாறு மழை வேண்டும் விழாவாகவே வர்ணிக்கப் படுகின்றது. இதிலிருந்து வேந்தன் விழாவே இந்திர விழா என்றும் கருதலாம்.*

*இந்திரன் குறித்த தமிழ்த் தொன்மங்களில் பல ஆரியச் சார்பு இருப்பது உண்மையே. ஆனால் அகலிகை தொடர்பால் ஆயிரங்கண்ணைப் பெற்றான் எனும் தொன்மம் திட்டமிட்டே செய்யப்பட்ட கட்டுக்கதை. இந்திரன் (வேந்தன்) மழையின் தெய்வம். நட்சத்திரங்களின் தலைவன் என்பதால் ஆயிரங்கண் இருந்ததில் ஆச்சரியம் இல்லை. ஆனால் ஏன் இவ்வாறான தொன்மங்களால் இந்திரன் தொல்லை செய்யப்பட்டான் என்பதை நாம் சிந்திக்க வேண்டும். இவ்வாறான சிந்தனைகள் முகிழ்க்கையில் தமிழ் வேந்தனாம் இந்திரன் மீது கட்டப்பட்ட பொய் மூட்டைகள் கால வரலாற்றில் காணாமல் போகும் என்பதில் ஐயமில்லை. இந்திரனுக்கு ஆயிரம் கண் ஏன் என்பதற்கு கச்சியப்பரின்* ***விநாயகப் புராணம்*** *வருமாறு பதிலுரைக்கிறது.*

***"கையினல் பிடித்தடித்தும் கடவடியில்***
***பருத்திட்டும்***
***வையெல்லாம் தணப்பித்து மருவு பதர்***

*நவை நீக்கிச்*

*செய்யெலா மிகக் குவிக்குஞ் செந்நெல்*

*வள நோக்குதற்கே*

*மெய்யெல்லாம் வி ழி படைத்தான்*

*விண்ணவனாமிந்திரனே”*

வயலில் மள்ளர்கள் அடித்துக் குவித்திருக்கும் செந்நெல்லின் வளத்தைப் பார்த்து மகிழ்வதற்காகவே இந்தினுக்கு உடலெல்லாம் கண்கள் படைக்கப்பட்டது என்பது இப்பாடலின் பொருள். இதனை மனம் கொண்டால்,

*“சந்திரரே சூரியரே*

*சாமி பகவானே*

*இந்திரரே இப்பமழை*

*பெய்ய வேணும்”*

எனும் தமிழ்நாட்டு உழத்தியின் நாட்டுப்பாடல் மரபும்,

*“காவுக் இறைவனாம் இந்திரன்*

*ஏவற் பண் கொண்டெழுந்தான்”*

*(முக்கூடற்பள்ளு, பா.எண்.37)*

எனும் பள்ளுப்பாட்டும் இந்திர விழாவை (மருத நில வேந்தன் விழா) மருத நில மக்களின் மழை வழிபாட்டு விழாவாகவே பாடுவதை உய்த்துணர முடியும்.

தொல்காப்பியரின் வேந்தனுக்கும் ஆரிய மழைக் கடவுளான இந்திரனுக்கும் யாதொரு தொடர்புமில்லை. (தொல்காப்பியரின் வேந்தன் அந்நில மக்கள் வழிபடும் குல முன்னோன் ஆவான்) ஆரியப் பண்பாட்டுப் புராணக் கலப்பால் இரண்டு தெய்வங்களும் ஒன்றெனக் கருதும் நிலை தமிழிலக்கியத் தொன்மங்களில் காணப்படுகின்றன என்பதே உண்மை.

வேதகாலத்தில் மிகப் பிரசித்திபெற்ற தெய்வமாக விளங்கியவன் இந்திரன் என்று அறிகிறோம். இதனடிப்படையில் இந்திரனை வீழ்த்தும் நோக்கில் பல தொன்மங்களும் புராணங்களும் கட்டுக்கதைகளும் புனையப்பட்டன. இந்தியாவில் பிரசித்தி பெற்று விளங்கிய தேவேந்திரன் வழிபாடு பௌத்த மதத்தோடு தொடர்பு படுத்தப்பட்டு உலகம் முழுவதும் பரவிய காலம் ஒன்று இருந்தது: என்ற செய்தியை **முனைவர் செ. இராஜேஸ்வரியின் “தேவேந்திரன்”** என்ற நூல் முன் வைக்கிறது. அவ்வகையில் இந்நூல் மூன்று இயல்களில் அமைக்கப்பட்டுள்ளது.

- ***தேவேந்திரன் கருத்தும் கதைகளும்***
- ***தமிழ்நாட்டிலும் ஜப்பானிலும் இந்திரன் வழிபாடு***
- ***இந்திர வழிபாடும் வேளாண் சமூகமும்***

*என்றவாறு அமையும் இந்நூலின் செல்நெறி தேவகால இந்திரன் வேறு: தமிழகத்தில் மருதநிலக் கடவுளான வேந்தனான தேவேந்திரன் வேறு என்பதை பல ஒப்பீட்டுக் கருத்துக்களின் வழி புலப்படுத்துகின்றது. அதிலும் குறிப்பாக மருதநில உழவரான தேவேந்திரன் குல வேளாளர்களின் முதன்மைக் கடவுளாக தேவேந்திரன் எவ்வாறு விளங்கினான் என்பதை இன்றைய கீழடி ஆய்வு வரை சான்று காட்டி விளக்கியிருப்பது இந்நூலின் தனித்த சிறப்பு ஆகும். இந்நூல் தேவேந்திரன் பற்றிய பல சுவையான செய்திகளை உலகளவில் திரட்டிச் சொல்லியிருக்கிறது. இந்நூலில் இடம்பெற்றுள்ள படக்காட்சிகள் வாசிப்போரின் சிந்தனையை வளப்படுத்தும் தன்மையுடையதாக இருக்கின்றன. சங்க இலக்கியத்தில் வரும் மள்ளர் யார்? இந்திரனுக்கும் அய்யனாருக்குமான தொடர்புகள், உலகமெங்கிலும் வேந்தனே முதன்மைக் கடவுளாக விளங்கிய வரலாறுகள் போன்றன தேவேந்திரன் பற்றிய புதிய செய்திகளாக அமைகின்றன.*

இந்திரவிழா தமிழர் திருவிழா என்ற சிந்தனை, ஜப்பானில் இந்திர வழிபாடு நடைபெறும் விதம், இந்திரன் கோயில் சிவன் கோயிலான வரலாறு, கேரளாவில் இந்திரன் வழிபாடு, காமன் பண்டிகைக்கும் இந்திர விழாவுக்குமான தொடர்புகள், இந்திராணி பற்றிய பல வரலாற்றுச் செய்திகள் என்று விரியும் இந்த நூல் "தேவேந்திரன்" எனும் மருதநிலக் கடவுள் பற்றிய ஒரு சிறந்த ஆய்வு நூல் ஆகும். இதில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு கருத்தும் ஒரு தனித்த நூலாக எழுதப்படும் அளவுக்கான தகவல்களைக் கொண்டு விளங்குகின்றன. தேவேந்திரன் பற்றிய கூடுதலான தேடலுக்கும், புதிய ஆய்வுச் சிந்தனைக்கும் இந்த நூல் வழிகாட்டியுள்ளது என்று உறுதியாக என்னால் சொல்ல முடியும். இந்த நூலின் ஆசிரியர் முனைவர் செ. இராஜேஸ்வரி அவர்களைப் பாராட்டுகின்றேன். அவர் மேலும் இதுபோன்ற பல நூல்களை எழுதிட வாழ்த்துகின்றேன்.

மிக்க நட்புடன்

(தே. ஞானசேகரன்)

## நூலாசிரியர் பற்றி



முனைவர்.செ. இராஜேஸ்வரி மொழி பெயர்ப்பியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றவர். **புலமை, செந்தமிழ், வளர் தமிழ், ஓங்கு தமிழ் நா.வா.வின் ஆராய்ச்சி** போன்ற ஆய்விதழ்களில் ஆய்வுக் கட்டுரைகள் வெளியிட்டார். **மொழி பெயர்ப்பியல் ஆய்வு** என்ற ஆய்வு கட்டுரைகள் அடங்கிய நூல் ஒன்றை 1992இல் வெளியிட்டார். இந்நூல் இணையத் தமிழ் பல்கலைகழகத்தின் மின் நூல் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.

1988 முதல் தமிழ் ஆங்கில மொழிபெயர்ப்புப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். *Indian Women–Changes and Challenges, Urban Theology, Vaigai Paripatal, Assisted reproductive technologies and its Impact on Women, Eco Vision and Mission, Bachelor's Study Materials for Social Science [IGNOU], Neuro Ophthalmology Articles* போன்ற பல துறை சார்ந்த பனுவல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். 1993இல் ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் இணைப் பதிப்பாசிரியராகப் *[Associate editor]* பணியாற்றினார். அப்போது ஜப்பானிய மொழியைத் தமிழில் கற்பது எளிது என்பதை அறிந்து அதற்கான நூல் உருவாக்கும் பணியில் ஜப்பானியப் பெண் யூகோ ஃபுகுரோயியுடன்

இணைந்து செயல்பட்டார். அந்த நூல் மூன்று பாகங்களாக வெளி வந்துள்ளது. ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் வெளிநாட்டு மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். தமிழ் மாணவர்களுக்கு ஜப்பானிய மொழி இலக்கணம் கற்பித்தார். யுக்கோ சான் அம்மாணவர்களுக்கு ஒலிப்பயிற்சி அளித்தார்.

1986 முதல் சமயச் சொல் அகராதி, எபிரேயம் - தமிழ் அகராதி; கிரேக்கம் - தமிழ் அகராதி உருவாக்கத்திற்காக மக்கள் கல்வி அறக்கட்டளையின் இயக்குனர் மறை திரு.இராபின்சன் லேவி ஐயா அவர்களுடன் இணைந்து இருபது ஆண்டுகள் தீவிரமாகப் பணியாற்றினார். ஈரோடு மகளிர் கலை, அறிவியல் கல்லூரி, திருச்சி ஸ்ரீமத் ஆண்டவன் கலை, அறிவியல் கல்லூரி, மதுரை அமெரிக்கன் கல்லூரி போன்றவற்றில் சில ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினார்.

2000இல் மதுரையில் அமெரிக்காவின் விஸ்கான்சின் பல்கலைக்கழக மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். அப்போது வெளிநாட்டவருக்கு தமிழ் கற்பிக்கப் பாட நூல் ஒன்றை உருவாக்கினார். அரவிந்த் கண் மருத்துவமனையில் மொழி பெயர்ப்பாளராகவும் வேற்று மாநிலம் மற்றும் வெளிநாட்டு மருத்துவர்களுக்கு, தமிழ் ஆசிரியராகவும் பணியாற்றினார். அப்போது தமிழ் தெரியாத கண் மருத்துவர்களுக்குத் தமிழ் கற்பிக்க

*Tamil for Non-Tamils* என்ற பாட நூலை உருவாக்கினார். இன்றும் அந்தப் பாட நூல் அங்குப் பயன்பாட்டில் உள்ளது. அது போல அங்குச் செவிலியர் பயிற்சி பெறும் இளம் பெண்களுக்கு ஆங்கிலம் கற்பிக்க *Easy English* என்ற ஆங்கிலப் பாட நூலை உருவாக்கினார். மக்கள் கண்காணிப்பகத்தில் வெளி மாநிலத்தவருக்கு ஆங்கிலமும் வெளி நாட்டவருக்குத் தமிழும் கற்பித்தார்.

தமிழ் கற்கும் வெளிநாட்டு மாணவர்களுக்காக சென்ட்டர் ஃபார் லேங்குவேஜ் ஸ்டடீஸ் *[Centre for Language Studies]* என்ற பெயரில் தனி மையம் ஒன்றை அமைத்து அவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். திராவிட இயக்கப் பாரம்பரியத்தில் வந்ததனால் இவர் திமுக, அதிமுக வரலாறு குறித்து அறிந்திருந்தார். குறிப்பாக எம்.ஜி.ஆர். பற்றிய தகவல்களைத் தொகுத்து வைத்திருந்தார். தமிழ்க் கலையும் பண்பாடும் பற்றிக் கற்பிக்கும்போது தமிழ்நாட்டில் மேடைத்தமிழ், மேடை நாடகம், திரைப்படம் ஆகியன அரசியலில் உருவாக்கிய விதம் பற்றியும் விளக்கினார். அப்போது எம்.ஜி.ஆர். அரசியல் தலைவரான விதம் குறித்து மேலும் அறிந்துகொள்வதில் அமெரிக்க மாணவர்கள் மிகுந்த ஆர்வம் காட்டினர். அவர்களை எம்.ஜி.ஆர். படங்களைப் பார்க்க திரையரங்குக்கு அழைத்துச் சென்றார். திரை அரங்கில் இரசிகர்கள் காட்டிய ஆர்வமும் ஆர்ப்பரிப்பும் கண்டு கேட்டு வியந்து எம்.ஜி.ஆர். குறித்து சில மாணவர்களும் பேராசிரியை

*முனைவர் சாரா திக்கி என்பவரும் ஆராய்ச்சி செய்தனர். அவர்களின் ஆர்வம் கண்டு எம்.ஜி.ஆர். தகவல் மையம் ஒன்றைத் தொடங்கி அவர் குறித்த நூல்களையும் அவரது படங்களையும் சேகரித்து வைத்தார். பின்னர் அமெரிக்க மாணவர்கள் இந்தியாவுக்கு வருவது குறைந்ததால் இத்திட்டத்தைத் தொடர்ந்து செயல்பட முடியவில்லை.*

*எம்.ஜி.ஆர். பற்றி "ஒப்பனையும் ஒரிஜினலும் எம்.ஜி.ஆர். 100" என்ற தலைப்பில் விகடன்.காமில் (காம் இணைய தளத்தில்) முப்பது கட்டுரைகள் வெளியிட்டார். அதன் தொடர்ச்சியாக கனடாவில் இருந்து வரும் www.tamilauthors.com என்ற இணைய இதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதினார். எம்.ஜி.ஆரின் ரசிகர் மன்றங்களின் தனித்தன்மை குறித்து ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதிவருகிறார். எம்.ஜி.ஆர். பற்றி நூறு நூல்கள் எழுத வேண்டும் என்பது இவர் இலட்சியம். அதில் தற்போது* **வெற்றித் திருமகன்** *என்ற பெயரில் தொடங்கும் வரிசை நூல்கள் ஆகும், எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம், சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்), வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட, மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர்., எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி, எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி, ஒளி விளக்கு எம்.ஜி.ஆர்., வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I, நீங்க*

*நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் -I], பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II], இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர்., முத்தமிழ்க் காவியம் மதுரை வீரன், இரட்டை வேடத்தில் ஜொலிக்கும் எம்.ஜி.ஆர்., எம்.ஜி.ஆர். படங்களில் அறிவியல் புனைவு [MGR Science Fiction Films], படகோட்டி, மீனவ நண்பன் ஓர் ஒப்பீடு மற்றும் எம்.ஜி.ஆர். பற்றிய ஆங்கில நூலான Unique Fandom of MGR ஆகியவை வெளிவந்துள்ளன.*

*தஞ்சையைச் சேர்ந்த தமிழ் இலக்கியச் செம்மல் கவிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் பூ மர நிழல், வறட்சியின் பாடல்கள், உன்னொடு உரையாடுதல் காதலின் மொழி மற்றும் திட்டிவாசல் பெண்ணொருத்தி என்ற கவிதை நூல்களை இவர் முறையே* **"Shade of the Flowering Tree, Songs of Dryness, Speaking with You Language of Love, and A Lady at the little gate",** *என்று ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இந் நூல்களை சென்னை எமரால்டு பதிப்பகம் வெளியிட்டுள்ளது.*

*தமிழிலக்கியச் செம்மல் கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் பூ மர நிழல் மற்றும் திட்டி வாசல் பெண்ணொருத்தியின் தொகுப்புகளில் உள்ளடக்கப் பகுப்பாய்வு மேற்கொண்டு அவற்றைப்* ***பூ மர நிழலில் களமும் காலமும்*** *மற்றும்*

கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பியின் **பாடுபொருளும் பாசப்பொருளும் [திட்டிவாசல் பெண்ணொருத்தி மட்டும்], தமிழ்நாட்டிலிருந்து ஜப்பானுக்கு (சமயமும் பண்பாடும்), தேவேந்திரன்** ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்.

சென்னை பெருநகராட்சியின் முன்னாள் மேயர் மனித நேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும் என்ற பெயரில் ஒரு நூல் எழுதி வெளியிட்டுள்ளார். இவர் எழுதிய சிறுகதைகள் **'அமராவதியின் காதல்'** என்ற பெயரில் தொகுக்கப்பட்டு அமேசானில் வெளிவந்துள்ளது. இவர் தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்குச் சென்றவை பற்றி எழுதி வரும் ஆய்வுக் கட்டுரைகள் நெருஞ்சி என்னும் இலக்கிய இதழில் வெளிவருகின்றன. தினகரன் ஜோதிட மலரில் இவர் எழுதிய **"என்னோட ராசி நல்ல ராசி"** என்ற தொடர் வந்து கொண்டிருக்கின்றது. மாதமிரு முறை வரும் ஆன்மீகம் இதழில் **'மர வழிபாட்டின் வேர்களைத் தேடி (Deep into the roots of Tree worship), காளியும் தேவியும், உலகளாவிய காளி கோட்பாடு'** போன்ற ஆன்மீகக் கட்டுரைகள் வெளிவருகின்றன.



# உள்ளடக்கம்





# தேவேந்திரன் கருத்தும் கதைகளும்

*இந்தியாவில் தேவர்களின் தலைவனான இந்திரன் மேகத்துக்கும் வீரத்திற்கும் கடவுளாக இருப்பதைப் போன்று ஐரோப்பிய நாடுகளிலும் இந்திரனைப் போலவே சில தெய்வங்கள் மழை மற்றும் வீரத்துக்கு உரிய கடவுளாகப் போற்றப்பட்டனர். ஐரோப்பிய நாடுகளில் வணங்கப்பட்ட இந்திரனை நிகர்த்த தெய்வங்கள் குழந்தைப்பேறு தொடர்பு உடையனவாக இல்லை. இத்தெய்வங்களுக்கு பல குழந்தைகள் இருந்தாலும் இவை வீரம், இடி மழை, விளைச்சல் சார்ந்த தெய்வங்களாகவே போற்றப்பட்டன அவ்வகையில் இவற்றிற்கும் தமிழகத்துத் தேவேந்திரனுக்கும் யாதொரு தொடர்பும் கிடையாது.*

*ஜெர்மனியில் கிறிஸ்தவம் பரப்பப்படுவதற்கு முன்பு வரை வணங்கப்பட்டு வந்த பெருந்தெய்வம் ஒடன் [WODEN] என்பதாகும். நோர்ஸ் இனத்தினர் இத் தெய்வத்தை ஓடின் [ODIN] என்றனர். கிரேக்கர்கள் ஜியுஸ் என்பர். ரோமர்கள் ஜூபிட்டர் என்றனர்.*

**ஒடனும் புதனும்**

கிறித்துவம் வருவதற்கு முன்பு ஜெர்மானியரின் 'ஒடன்' அந்நாட்டின் தலைமைக் கடவுளாக வழிபடப்பட்டது. கிராமங்களில் இன்றும் இத்தெய்வம் பற்றிய கதைகள் நிறைய உண்டு. இவர்கள் புதன் கிழமையை 'ஒடனஸ் டே' அழைக்கின்றனர். அதாவது ஒடனின் நாள் ஆகும். புதன் அறிவுள்ளவன். அவனது நாள் *WEDNES DAY* அதாவது *WODENS* டே -ஓடன்ஸ் டே. இலத்தீனில் இத்தெய்வத்தை 'வாடேஸ்' *[VATES]* என்பர். இதன் பொருள் தீர்க்கதரிசி, புத்திமான், இனி நடக்கப் போவதை எடுத்துக்கூறும் அறிஞர் என்பனவாகும். இதே பொருளில் தான் புதன் என்ற சொல்லும் பொருள் தருகிறது. கிரகங்களில் புதன் என்றால் புத்தி உடையவன், நிதானமாகச் சிந்திக்கும் ஆற்றல் பெற்றவன் என்பது



வாடேஸ் என்னும் தெய்வம்

பொருளாகும். புதன் என்பதற்கும் புத்தன் என்பதற்கும் உரிய வேர்ச்சொல் புத் [புத்தி] என்பதாகும். இங்குள்ள இந்திரனைப் போல அங்கு வழிபடப்பட்ட பெருங்கடவுளான ஒடன் வீரனும் விவேகியும் ஆவான்.

ஸ்வீடன் நாட்டில் புதன் கிழமையை ஒன்ஸ் டாக் [ONS DAG] என்பர். ஒன்ஸ் என்பது 'ஒடனின்' என்றும் DAG என்பது DAY அல்லது நாள் என்பதையும் குறிக்கும். டேனிஷ் மொழியிலும் நோர்வேஜிய மொழியிலும் ODINSDAGa என்று புதன் கிழமையை வழங்குவர். ஆக ஜெர்மனி, டென்மார்க், சுவிடன், நார்வே ஆகிய நாடுகளில் தலைமை கடவுளான ஒடன் பெயரில் புதன் கிழமை பெயர் பெற்றதை அறிகிறோம்.

## ஜுபிட்டரும் வியாழனும்

ரோமர்கள் இந்திரனுக்கு நிகரான ஒரு கடவுளை ஜுபிட்டர் என்று அழைக்கின்றனர். ஜுபிட்டர் என்றால் கிரகங்களில் அவன் குருபகவான் ஆவான். வியாழன் அல்லது பொன்னன் எனப்படுவான். வியாழனும் விவேகி, புத்திசாலி. அவன் இந்து புராணங்களில் தேவர்களின் குருவான பிரகஸ்பதி ஆகிறான். ரோம் நாட்டில் ஜூபிடர் எனப்படும் வியாழன், சனியின் தந்தையாக கருதப்படுகிறான். இந்து சமயத்தில் சூரியன் சனியின் தந்தை ஆக

நமபப்படுகிறான். ஆனால் இந்து சமயத்தில் சனியின் தந்தை வியாழன் அல்ல சூரியன் ஆவான்.

ரோமர் புராணத்தில் ஜூனோ என்பவள் ஜூபிடர் மனைவியும் சகோதரியும் ஆவாள். அக்காலகட்டத்தில் சுத்த ரத்தக் கோட்பாடு [PURE BLOOD CONCEPT] நம்பிக்கை காரணமாக தன்னுடைய சகோதரியை வெளியினத்தில் திருமணம் செய்து கொடுக்கும் பழக்கம் காணப்படவில்லை. எனவே ஆண்கள் தமது சகோதரிகளையே திருமணம் செய்து கொண்டனர். ஜூபிடரும் தன் சகோதரியான ஜூனோவை திருமணம் செய்துகொண்டார். இவர்களின் மகள் மினர்வா ஜுபிட்டருக்கு அடுத்தபடியாக வேளாண்மைக்கும் போருக்கும் உரிய தெய்வமாக போற்றப்பட்டாள்.



ஜூபிடர், ஜூனோ

கிரேக்கர்களின் ஜியஸ் என்ற தெய்வம், காலம் எனப்படும் குரோசின் என்பவனின் தந்தையாவார். ஜியூஸ் தேவர்களின் தலைவன்; இடிமின்னல் மழைக்கு அதிகாரம் பெற்றவன். ஒலிம்பஸ் மலையிலுள்ள கடவுளர்களின் கடவுள் ஆவான். அதாவது தேவர்களின் தலைவனான தேவேந்திரனை நிகர்த்தவன் எனலாம். இவனுடைய அடையாளமாக இடி, மின்னல் இது தவிர பருந்து, காளை மாடு ஓக்மரம் ஆகியவையும் சுட்டப்படுகின்றன.

ஜியசும் கிரேக்கக் கதைகளில் இந்திரனைப் போல ஆண்மையின் சின்னமாகக் காட்டப்படுகிறான். அவன் பல்வேறு பெண்களுடன் கூடி அதேனா, அபோலோ, ஆர்டிமிஸ், ஹெர்மிஸ், டயோநிசாஸ், பெர்சிபொான், ஹிராக்கில்ஸ், என பலரின் தந்தையாகவும் இவனைக் கருதுகின்றனர். இந்திரன் மேகங்களை திரட்டி மழையைப் பெய்விப்பவன் என்பது போல ஜியசும் மேகங்களை திரட்டுபவன் ஆவான், மேகங்களை திராடுபவன் என்ற பொருளில் இவனை நெஂஃபலே கிரேட்டா [NEPHELE GRETA] என்று அழைத்தனர். ஜியசை 'வானங்களின் தந்தை' [FATHER OF THE SKIES] என்ற பொருளில் 'பாகால் ஷாமீன்' [BAHAAL SHAMIIN] என்றனர். ஜீயஸ் ஓரளவுக்கு இந்திரனுடம் ஒத்துக் காணப்படுகிறான்.

## மல்லர் நாகரீகமே தொல்தமிழர் நாகரிகம்

மலைக் குகைகளில் வாழ்ந்த மனிதன் உணவு சேகரிப்பு காலத்துக்கு அடுத்து வேட்டைக் காலம் வந்ததும் ஈட்டி கண்டுபிடிக்கப்பட்டது. ஈட்டியைக் கருவியாகக் கொண்டு ஆண்கள் கூட்டமாக முன்னேறி விலங்குகளைக் கொன்று குவிக்க அவற்றின் இறைச்சியை நெருப்பிலிட்டு பதப்படுத்தி பெண்கள் உணவு சமைத்து கொடுத்தனர். இக்காலகட்டத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் பணி பங்கீடு தோன்றத் தொடங்கியது.

தோல்களை ஆடையாக உடுத்தி குகைகளில் கூடி வசித்த மனித சமுதாயம் பின்பு மெல்ல மெல்ல மலையை விட்டுக் கீழிறங்கி நீர் நிலைகளில் இருக்கும் இடங்களில் விளையும் தாவர உணவுகளையும் சாப்பிடப் பழகியது. தாவர உணவுப் பழக்கம் வந்ததும் மனிதர் உணவு தானிய வளர்ப்பில் ஈடுபாடு காட்டத் தொடங்கினர். உணவு தானியங்களை வளர்ப்பதற்கு பெரிய நிலப்பரப்பைக் கையகப்படுத்தினர். தன்னுடையது என அதிகாரம் செலுத்தினர். அந்நிலத்தைக் காக்க மேலும் சில நம்பிக்கையான ஆட்களை நியமித்தனர். அவர்களை தம் ரத்த சொந்தங்களாக தேர்ந்தெடுத்தனர். தனக்கு பிறந்த பிள்ளைகள் என்பதை உறுதி செய்ய பெண்களின் பாலியல் சுதந்திரத்தை ஒடுக்கி அவர்களுக்கு மனைவி என்ற சமூகத் தகுதியை வழங்கினர்.

பெண் முதன்மை மறையத் தொடங்கியதும் தனிக் குடும்பங்கள் தோன்றின. குடும்பங்கள் இணைந்து சமுதாயம் ஆயிற்று. வீரமும் விவேகமும் நிறைந்த குடும்பன் வேந்தன் வேளாளன் ஆனான். அவனுக்கு வேளாண் பணிகளைச் செய்ய பலர் தேவைப்பட்டனர். பணிகளில் ஈடுபட்டவர்கள் விளைச்சலைப் பகிர்ந்து கொண்டனர். பகிர்வின் போது தகராறுகள் தோன்றின, சச்சரவுகள் ஏற்பட்டன. அப்போதுதான் ஒருவனுக்கு தன் சார்புடையவர்கள் மட்டுமே விளைச்சலின் பலனை அனுபவிக்க வேண்டும் என்ற தார்மீக எண்ணம் ஏற்பட்டது. இப்படி எண்ணத்தின் செயல்பாடாக தோன்றியதுதான் ஒரு ஆணின் உயிரணுவில் இருந்து தோன்றிய பிள்ளைகளும் அவர்களின் பிள்ளைகளும் பிள்ளைகளின் பிள்ளைகளும் ஆவர்.

**மல்லன் மூதூர்**

ஆண் முதன்மைச் சமுதாயத்தில் ஆடவர் தலைவனாக கருதப்பட்டான். தலைவன் தனது கட்டுப்பாட்டின் கீழிருந்த மக்களை பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டதனால் வீர விளையாட்டுகள் நாளும் பொழுதும் நடந்துவந்தன. வேளாண் தொழில் செய்து வந்த குடும்பர்கள் ஓய்வு நேரங்களில் வீர விளையாட்டுகளில் ஈடுபட்டனர். மல்யுத்தம் எனப்படும் மல்லுக்கட்டு இவர்களின்

பொழுதுபோக்கு ஆயிற்று. இதனால் இவர்கள் மல்லர் என்றும் மள்ளர்கள் [வீரர்கள்] என்றும் அழைக்கப்பட்டனர். சிலம்பம், களரி போன்ற வீர விளையாட்டுகளில் இவர்கள் ஈடுபட்டனர். வீரமும் ஈரமும் இவர்களின் பண்புகள் ஆயிற்று. மல்லர்கள் தம் மனைவி மக்கள் நிலம் மற்றவற்றை காக்கும் கடமையும் பொறுப்பும் கொண்டவர்களாக இருந்ததனால் காவல் அரண்கள் கொண்ட வீடுகளை கட்டினர். தங்கள் ஊர்களுக்கு மிகப்பெரிய கோட்டை கொத்தளங்களை அமைத்தனர். இவர்களின் பாதுகாப்பான குடியிருப்புகள் நகர் என்ற பெயரில் அழைக்கப்பட்டனர். மறுத்த நிலத்தின் தலைமையகமாக விளங்கும் மதுரை நகர் 'மல்லன் மூதூர்' என்று அழைக்கப்பட்டது.

பெரிய நிலப்பரப்பு ஆற்றங்கரைகளில் கிடைத்ததால் மக்கள் ஆற்றங்கரைகளில் கூடி வாழத் தொடங்கினர். கரைகளில் தங்கியிருந்த குடும்பங்கள் ஆற்று நீர்ப்பாசனத்தில் கவனம் செலுத்தின. வேளாண் அறிவியலும் நீர் மேலாண்மை தொழில் நுட்பமும் தெரிந்த இவர்கள் தமிழகத்தில் அறிவியல் நிபுணர்கள் ஆவர். குடும்பர்களின் தலைவன் வேந்தன் எனப்பட்டான். அவனுக்கு மிகப் பெரிய நிலப்பரப்பு அல்லது பல ஊர்கள் சொந்தமாக இருந்தன. இவன் மழை நீர் சேகரிப்பு, அணை



கட்டுதல், ஏரி கால்வாய் வெட்டுதல் போன்றவற்றை மேம்படுத்த ஆவன செய்தான்.

சங்கப் புலவர் குடபுலவியனார் “வான் முட்டும் வள நீண்ட மதில் மல்லன் மூதூர் வய வேந்தே” என்றார். ‘வய வேந்தே’ என்றால் வலிமை உடைய வேந்தனே என்பது பொருள் மூதூர் என்பதால் மள்ளர் வாழ்ந்த இந்த ஊர் மிகப் பழைய ஊர் என்பது பெறப்படுகிறது. அவ்வூர் நீண்ட மதிலைக் கொண்டது, அம்மதில் வானை முட்டும் உயரத்தை உடையது, நீண்ட உயரமான மதிலால் சூழப்பட்ட மிகப் பழைய ஊருக்கு காவலனாய் இருப்பவன் வேந்தன்.

***மள்ளர் யார்?***

மள்ளர் மல்லர் என இரண்டு வகையாக அழைக்கப்படும் குடும்ப இனத்தவர் மல்லாடலால் மல்லர் என்றும் வீரத்தால் மள்ளர்

*என்றும் அழைக்கப்பட்டனர். தமிழ் இலக்கியங்கள் இவர்களை மள்ளர் என்றே குறிப்பிடுகின்றன.*

**“அருந்திறல் வீரர்க்கும்**

**பெருந்திறல் உழவர்க்கும்**

**வருந்தகைத் தாகும் மள்ளர்”**

*என்று திவாகரம் விளக்குகிறது. மல்லரென்ற சொல்லின் பொருள் ‘வீரர் மற்றும் உழவர்’ என்பதை திவாகரம் தெளிவாகச் சுட்டுகிறது.*

**“செருமலை வீரரும் திண்ணி யோரும்**

**மருத நில மக்களும் மள்ளர் என்ப”**

*என்று பிங்கல நிகண்டும் இவர்களின் வீரத்தையும் உடல் உறுதியையும் தெளிவாக்குகிறது. இவர்கள் மருத நிலத்தைச் சேர்ந்தவர்கள்.*

**மள்ளர்களின் வேறு பெயர்கள்**

*வீரத்தால் மல்லர் என்றும் குடும்ப அமைப்பை உருவாக்கியதால் குடும்பன் என்றும் பேர் பெற்ற இவர்கள் நதிக்கரை ஊர்களில் வசித்ததால் ஊரன் என்றும் மருத நிலத்தைச் சேர்ந்தவர் என்பதால் மருதனார் என்றும் மகிழ்நன் என்றும் வழங்கப்பட்டனர். படை நடத்திச் செல்பவர் என்பதால் படையாட்சி என்றும்*

அழைக்கப்பட்டனர். நீர் மேலாண்மையில் கெட்டிக்காரர்கள் என்பதால் நீராணிக்கர் எனப்பட்டனர். மடை மேலாண்மை இவர்களின் பொறுப்பில் இருந்ததனால் மடைக்காரர் என்றும் அழைக்கப்பட்டனர். வளம் நிரம்பிய நிலங்களுக்குச் சொந்தக்காரர்கள் என்பதால் வளம்பர் எனப்பட்டனர். அணை, ஏரிக்கரை, கண்மாய்க்கரை போன்றவற்றின் பாதுகாப்பு இவர்கள் வசம் ஒப்படைக்கப் பட்டது. இதனால் இவர்கள் கரையாளர் கரையார் என்றும் காலாங்கரையார் என்றும் அணைக் கரையார் என்றும் பெயர் பெற்றிருந்தனர். கொழு, கலப்பை, மம்பட்டி போன்ற நிலத்தைப் பண்படுத்தி உழவுத்தொழில் செய்து களத்தில் கதிர் அடித்து பணிபுரிவோர் என்பதனால் விவசாயம் தொடர்பான மம்பட்டிக்காரன், மேழியர், களமர், கருங்களமர் போன்ற பெயர்களும் இவர்களுக்கு இருந்தன.

மள்ளர் ஆண் முதன்மைச் சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் என்பதால் ஆண்மையின் குறியீடாக போற்றப்பட்ட தேவேந்திரனின் பெயரால் இந்திர குல வேளாளர், தெய்வேந்திரர், இந்திர குலத்தார், இந்திர வன்னியர் என்று இந்திரனின் பெயரால் அழைக்கப்பட்டனர். இவர்கள் பெரும் நிலப்பரப்பை ஆளும் ஆட்சியாளராக விளங்கியதால் காணியாளர், பட்டக்காரர், மண்ணாடியார், மன்றாடியார்,

*பல்லவரையன், இரணுகுல வேந்தர், ரசகுந்தன், வானவராயன், வல்லவராயன், கோச்சடையான், வல்லபன், வர்மன், பாண்டி என்ற பெயர்களில் விளங்கினர்.*

*பாண்டியநாட்டைச் சேர்ந்தவர்கள் பாண்டி என்றும், கொங்கு நாட்டைச் வாழ்ந்தவர்கள் கொங்கன் என்றும், துளு நாட்டில் வாழ்ந்தவர்கள் துளுவன் என்றும் வாழிடத்திற்குத் தக்கபடியும் பெயர் பெற்றனர். இவை தவிர மூத்த தமிழ்க் குடியினர், பண்பாட்டில் மூப்புடையோர் என்பதனால், மூப்பனார், கடவர், கடம்பர், எனப்பட்டனர். நல்ல தண்ணீரில் குறிப்பாக ஆற்றிலும் ஏரியிலும் குளத்திலும் வலை வீசி மீன் பிடிக்கும் உரிமை பெற்றவர்கள் வலையர், மூப்பர் எனப்பட்டனர். சேற்றுக் கால் செல்வர், நெல்லின மக்கள் மல்லர் என்ற பல பெயர்களுக்குச் சொந்தக்காரர்களாக இருந்தனர்.*





## மருத நில மாண்பும் மள்ளர் இன மக்களும்

மருத நிலத்தை பற்றி குறிப்பிடும்போது அங்குள்ள தண்ணீரை தீம் புனல் என்கிறார் தொல்காப்பியர். இந்த பாகுபாடும் விளக்கமும் அறிவியல் கருத்துடையதாகும். மருத நிலத்தை வேந்தன் அரசாளும் நன்னீர் நிறைந்த உலகம் என்ற பொருளில்

**வேந்தன் மேய தீம்புனல் உலகம்**

என்கிறது தொல்காப்பியம். 'தீம்புனல் உலகத்தை' வேளாண் விஞ்ஞானி பாமயன் அறிவியல் முறையில் 'நன்னீர் சூழல் மண்டலம்' [fresh water eco system] என்கிறார். மருத நில மக்கள் நீர் மேலாண்மையில் சிறப்புற்று இருந்ததையும் அணை கட்டியதையும் அவர்களின் கலப்பை அமைப்பு வேறுபட்டு இருந்ததையும் அவர் தமது யூ டியுப் பேட்டியில் குறிப்பிட்டுள்ளார்.

ஆர்தர் காட்டன் என்பவர் கல்லணையை கிராண்ட் அணைக்கட்டு அதை குறிப்பிட்டு 'இவ்வாறு ஓடுகின்ற தண்ணீரில் அணை கட்டுவதை கற்றுத்தந்த அவருக்கு என் வணக்கம்' என்று தனது நூலில் குறிப்பிட்டுள்ளார் என்றார் பாமயன். கல் மேல் கல் வைத்துக் கட்டியதால் இது கல்லணை எனப்பட்டது என்றும் ஆர்தர் காட்டன் குறிப்பிட்டுள்ளார். அணை ஏரி குளம் என நீரைத் தேக்கி வைத்து தக்க சமயத்தில்

*நிலங்களுக்கு கால்வாய், வழியாகப் பாய விடுவதன் மூலம் நெல் விவசாயத்தில் முழுமையாக ஈடுபட்டு நல்ல விளைச்சலை பெற முடியும் என்று நிரூபித்தவர் தேவேந்திர சமூகத்தினர் ஆவர்.*

தேவேந்திரர் வேளாளர் குவித்த நெல் குன்று போல உயர்ந்து மருத நிலத்தை குறிஞ்சி நிலமாகக் காட்டியது என்று திருநாட்டுச் சிறப்பு பாடல் 25 குறிப்பிடுகின்றது. திருத் தொண்டர் புராணத்தில் மள்ளர் தம் நிலத்துக்கு நீர் கொண்டு வரும் அழகை

***'பிள்ளைத் தைவரப் பெருகி பால் சொரி முலைத் தாய் போல***

***மள்ளர் வேனிலின் மணல் திடர் பிசைந்து கைவருட***

***வெள்ள நீர் இருமருங்கு கால் வர மிதந்தேறிப்***

***பள்ள நீர் வயல் பருமடை உடைப்பது பாலி'***

*எனப் புனைந்துரைக்கிறது. பிள்ளை தனது தாயைத் தடவும்போது அவளுக்கு பால் சுரப்பது போல மள்ளர்கள் மணல் திடலை பிசைந்து தடவும்போது தண்ணீரானது சுரந்து இருமருங்கும் கரை பெருக ஓடி வந்து பள்ளமாக உள்ள நீண்ட வயல்களில் பாயும் என்று சேக்கிழார் பெரிய புராணத்தில் உள்ள திருக்குறிப்புத் தொண்டர்*

*புராணம் 22ஆம் பாடலில் எடுத்துக்காட்டுகிறார். கம்பரும் 'குன்றுடை குல மல்லர்' என்று மல்லர்களைச் சிறப்பித்துள்ளார்.*

**உலக அமைதியிலும் தேவேந்திரரின் பங்கு**

*நீர் மேலாண்மை சிறந்து நெல் வேளாண்மை செழித்து உணவுப் பொருள் பெருகியதால் சோழநாடு சோறுடைத்து என்ற சிறப்பு பெயர் தோன்றியது. நீர் மேலாண்மைக்காக பிற்காலச் சோழர்கள் 13 வகை கட்டுமானங்களை சோழநாட்டில் எழுப்பினர். இராஜேந்திர சோழன் பல நாடுகளை வெல்ல முக்கிய காரணமாக இருந்தது. வேளாண்மையின் விரிவாக்கமே என்பது வேளாண்வேந்தர் பாமயன் அவர்களின் கருத்து இத்தகைய வேளாண் விரிவாக்கத்திற்கு மூல காரணமாக இருந்தவர்கள் தேவேந்திர சமூகத்தினர் ஆவர்.*

*PILLARS OF SAND, என்ற நூலை எழுதிய சாந்த்ரா போஸ்டா 'மூன்றாவது உலகப்போர் தண்ணீருக்காகவே தோன்றும்; இப்போரைத் தவிர்க்க விரும்பினால் தென்னிந்தியாவுக்கு போய் ஏரித் தொழில் நுட்பத்தை கற்றுக் கொள்ளுங்கள் என்றார். இன்றைய உலக அமைதிக்கு முன்னோடியாக இருப்பது தேவேந்திர வேளாளரின் நீர் மேலாண்மை தொழில் நுட்பமே ஆகும். உலக அமைதிக்கு அடிகோலும் நீர்*

மேலாண்மைக்கு முழுச் சொந்தக்காரர்கள் தேவேந்திரகுல வேளாளர் ஆவர் என்பதில் ஐயமில்லை.

சோழர்கள் காலத்தில் காவிரி பாய்ந்த பகுதியில் ஆற்றுநீர்ப் பாசன முறைகள் தேவேந்திர வேளாளரால் சிறப்பாக வடிவமைக்கப்பட்டன. பிற்காலப் பாண்டியர்களும் வைகை நதி நீர் பாயும் நஞ்சை நிலங்களில் இங்கு வாழ்ந்த தேவேந்திர வேளாளரைக் கொண்டு நீர்ப்பாசன அமைப்புகளை சிறப்பாக உருவாக்கி இருந்தனர். செந்நெல்லும் கன்னலும் சிறப்பாக விளைந்தது. அடுத்து நாயக்கர் காலத்தில் வானம் பார்த்த பூமியில் புஞ்சைப் பாசனத்துக்காக நிறைய ஏரிகள் வெட்டப்பட்டன. கால்வாய்ப் பாசனம் சீரமைக்கப்பட்டது. இரும்பை குடி கிழவன் என்ற சிற்றரசன், சாத்தூர், சிவகாசி பகுதிகளில் ஏராளமான ஏரிகளை வெட்டினான். அக்காலத்தில் ஏரிகள் அவற்றை உருவாக்கியவர்களின் பெயர்களால் அழைக்கப்பட்டன. தத்தனேரி, சிலையனேரி, உழவன் ஏரி நடையனேரி, பாகனேரி என்று ஏரிகளை உருவாக்கிய தத்தன், சிலையின், பாகன், ஆகியோரின் பெயரால் ஏரிகள் அழைக்கப்பட்டன.

## ஐயனாரும் தேவேந்திரனும்

மள்ளர்கள் தாம் உருவாக்கிய ஏரிகளுக்கு தமது காவல் தெய்வமான அய்யனாரை வைத்து



வழிபட்டனர். மூத்த தொல்லியல் அறிஞர் பத்மாவதி, அய்யனார் என்ற பெயரில் தமிழ்நாட்டில் வழிபட்டு வந்த தெய்வத்தை பௌத்தர்கள் தங்களுடையதாக்கிக் கொண்டனர் என்ற கருத்தின்படி ஆராய்ந்தாலும் ஐயனார் வழிபாடு வேந்தன் வழிபாடாக இருந்திருக்கும் என்பது உறுதியாகிறது. அய்யன் என்றால் ஐயா, தலைவர், உயர்ந்தவர், மூத்தவர் என்பது பொருள். தமது வேளாளர் சமுதாயத்தில் குல முதுவராக விளங்கிய வேந்தன் அல்லது தேவேந்திரனை அய்யன் ஆர் என்ற சிறப்பு மரியாதை விகுதி சேர்த்து வழங்கினர்.

சமண, பவுத்த மதங்கள் தமிழகத்தில் செல்வாக்குடன் இருந்த வரை பெரியவர் மற்றும் தெய்வங்களின் பெயர்கள் ஆர் சேர்த்தே வழங்கப்பட்டன. நாகர், அய்யனார் என்பவை இதற்கு எடுத்துக்காட்டுகள் ஆகும். ‘அவனை அவர் பாடியது’ என்று மன்னனை அவன் என்றும் புலவரை அவர் என்றும் குறிப்பிட்டதும் அவர்களின் காலம் வரை இருந்து வந்த நடைமுறை ஆகும்.

சைவ வைணவச் சமயங்களின் ஆதிக்கத்துக்கு பின்னரே இறைவனை சிவன், இராமன், முருகன் என்று - அன் விகுதியிட்டுக் குறிப்பிடும் நடைமுறை தோன்றியது. ஐயனார் என்பவர் இந்துக் கடவுள் அல்லர். அவர் தேவேந்திரன் ஆவார். கேரளத்தில் இவரை சாஸ்தா என்றும் சாத்தன் என்றும் குறிப்பிடுவர். அங்கு பவுத்த



*சமயச் செல்வாக்கு இருந்த வரை தெய்வங்களில் உயர்ந்தவராக தேவேந்திரனையே கருதினர். பின்னர் சைவ, வைணவ ஆதிக்கத்தால் இந்திர வணக்கம் அங்கும் மறைந்தது. பெயர் மாற்றி சாஸ்தா என்றனர். அய்யன் ஐயப்பன் ஆனான்.*

*தேவேந்திரர் ஏரிக்கரையில் காவல் தெய்வமாக அய்யனாரை வைத்தனர். மடை காத்த அய்யனார், ஏரி காத்த ஐயனார், அருஞ்சுனை காத்த அய்யனார் என்று பல பெயர்களில் இன்றும் ஐயனார் வழிபடப்படுகிறார். இவர் சுத்த சைவக் கடவுள் இவருக்கு உயிர்ப்பலி கொடுப்பதில்லை.*

## இலிங்கமும் நாகமும்

*சைவ வைணவ ஆதிக்கத்தினால் எழுந்த சமயப்பரப்பு இலக்கியங்களான திருமுறைகளும் திருப்பாசுரங்களும் சமண் குண்டர்கள் என்றும் அமண் குண்டர்கள் என்றும் சாக்கியர்கள் என்றும் சமண பவுத்தர்களை இகழ்ந்தன. ஆண் குறி வழிபாடு இருந்த இந்திரன் கோயில்கள் சிவன் கோயில்களாக மாற்றப்பட்டன. வழிபடுக் குறியீடு பாணம் என்றும் சிவலிங்கம் என்று பெயர் பெற்றது. ஆண்குறியின் அடையாளமாக விளங்கிய நாகம் அதன் வீரியத்தை பல மடங்கு உயர்த்திக் காட்டுவதற்காக ஐந்து தலை நாகம் என விரிவாக்கம் பெற்றது. அதையே இந்து சமயங்கள் ஆயிரம் தலை நாகம், ஆதிசேஷன் என்று*



வீரியத்தின் வடிவை விரிவாக்கின. திருச் செங்கோடு மலையில் இரு புறமும் ஐந்து தலை நாகத்தின் உருவம் மலை உயரத்திற்கு செதுக்கப்பட்டிருந்ததை இன்றும் காணலாம். அது சமணத்திரு உருவாகும். பின்னர் வைதிகச் சமயங்கள் ஐந்து தலை நாகத்தை

தமதாக்கிக்கொண்டன. லிங்கத்துக்கு மேல் ஐந்து தலை நாகம் வைக்கப்பட்டது, பெருமாள் படுத்திருக்கும் பாம்பணை ஆயிரம் தலை கொண்ட ஆதிசேடன் ஆயிற்று. அல்லது பெருமாள் அமர்ந்து செல்லும் சேஷ வாகனம் ஆயிற்று.

**கோயிலும் நிலமும்**

சோழர் காலத்திலேயே கோயில் சார்ந்த நிர்வாக அமைப்புகள் தோன்றத் தொடங்கின. கோயிலுக்கென்று நிலங்கள் ஒதுக்கப்பட்டு அவற்றில் தேவேந்திரர் குத்தகைகாரர்களாக வேளாண் பணிகளை மேற்கொண்டனர். பிராமணர்களை மையப்படுத்திய அரசுகள் நிலங்களை தேவேந்திரரிடம் இருந்து பறித்து மந்திரிகளுக்கும் சேனாதிபதிகளுக்கும் தானமாக வழங்கின. தேவேந்திரர் பண்ணையம் பார்த்த நிலங்களில் அவர்கள் கூலிக்காரர்களாக பணி செய்ய நேர்ந்தது. விளைச்சலின் பலன் மட்டும் நிலவுடைமையாளர் என்ற பெயரில் அரசாங்கத்தில் இருந்த அந்தணர் சிலருக்கும் போயிற்று. அக்கால கட்டத்தில் நெல் வேளாண்மையின் உரிமையாளர்களாகத் திகழ்ந்த வீரத்தின் விளை நிலமாக விளங்கிய அவர்களின் தேவேந்திர வேளாளர் சமூகத்தாரின் முக்கியத்துவத்தைக் குறைக்க கோயிலுக்குப் பணி செய்த தொழில் பிரிவினர் பலரைப் பலவகை வேளாளர்களாக உருவாக்கி விட்டனர்.

இவர்களுக்கும் வேளாண்மைக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இவர்களுக்கு வேளாண் தொழில் நுட்பமும் நீர் மேலாண்மையும் தெரியாது.

நிலத்தில் இறங்கி சேற்றில் கால் வைத்து, வேளாண் பணி செய்யும் சேற்றுக்கால் செல்வர்கள் எனப்பட்ட மள்ளர்கள் மட்டுமே 'வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்' என்ற நடைமுறைக்குப் பொருத்தமானவர். மற்றவர்கள் வீட்டுக்கு வரும் விருந்தினரைப் பார்த்து 'சாப்பிட்டுவிட்டுத் தான் வந்திருப்பிர்கள்' என்று கேட்கும் பண்பினர் ஆவர்.

## உலகெங்கும் வேந்தனே வழிபடுதெய்வம்

உலகின் பல பகுதிகளில் காலப்போக்கில் வேந்தனே வழிபடு தெய்வமாகிப் போனான். மருத நிலத்திலும் இருந்து வந்ததனால் வேந்தனே தேவேந்திரன் எனப்பட்டான். இந்தியாவில் இரணியனும் எகிப்தில் நேபுகாத்நேச்சாரும் 'தானே தெய்வம்' என்று பறை சாற்றினர். இங்கிலாந்திலும் தெய்வமே அரசனாக வந்து ஆட்சி செய்வதாக நம்பிக்கை உண்டு. இதை 'DIVINE RIGHT THEORY' [டிவைன் ரைட் தியரி] என்பர். இது போன்றதொரு கொள்கை மருத நில மக்கள் வாழ்ந்த பகுதியிலும் வேந்தனே தேவன் அவனே தேவேந்திரன் என்ற நம்பிக்கை இருந்தது.

## இந்திரனுக்கு இளையோன் கண்ணன்

நிலவுடைமை மற்றும் வேளாண்மைக்கு உரியோர் பல சிக்கல்களைச் சந்தித்துக் கொண்டிருந்த வேளையில் தேவேந்திரருக்குக் கால்நடை மேய்ப்பவராலும் பல சிக்கல்கள் வந்ததுண்டு. வடநாட்டில் இவ்விரு தரப்பினருக்கும் இடையிலான பூசல் தான் இந்திரனுக்கும் கண்ணனுக்கும் இடையில் ஏற்பட்ட தகராறு ஆகும்.

இந்திரன் மழையைக் கொண்டு வர காளிந்தி நதியில் வெள்ளம் பெருக்கெடுத்தது. அப்பகுதியில் வாழ்ந்த யாதவர்கள் கோவர்த்தன மலையை தம் கடவுளாகப் போற்றித் துதித்தனர். கண்ணன் மலையைத் தன் சுண்டு விரலால் தூக்கி அதன் நிழலில் மக்களைக் கூட்டி வைத்து இந்திரனின் மழைப் பாதிப்பிலிருந்து காப்பாற்றினான். வேளாண் சமூகத்தினருக்கும் கால்நடை பராமரிப்பு இருக்கும் இடையிலான இனப் போராட்டத்தை இக்கதை குறிக்கின்றது. இந்திரனின் ஆதிக்கத்தை ஒடுக்க முனைந்த கண்ணன் இந்திரானுஜன் எனப்பட்டான். அதாவது இந்திரனுக்கு இளையோன். இது வயதைக் குறிப்பிட்டது அன்று அவனது அதிகாரத்தைக் குறிக்க தோன்றிய காரணப் பெயர் ஆகும்.



## ***இந்திரன் தமிழினத்தின் தலைவன்***

*தேவேந்திரனின் மலையான மகேந்திர மலை கடல்களுக்கு உட்பட்ட குமரிக் கண்டத்தில் இருந்த குமரிமலை என்று நம்பப்படுவதால் அவன் தென் பகுதிக்குத் தலைவன் ஆகிறான். காவிரி கடலில் கலக்கும் இடத்தில் உள்ள புகார் நகரில் இந்திர விழா ஆண்டுதோறும் கொண்டாடப்பட்டதாலும் மதுரையிலும் வைகை நதிக்கரையில் இந்திரவிழா கொண்டாடப்பட்ட செய்திகள் இருப்பதனாலும் இந்திரன் என்பவன் தமிழினத்தின் தலைவன் என்று கொள்வதற்கான வாய்ப்புகள் மிகுதி. இந்திர விழாவைக் கொண்டாடாத காரணத்தினால் புகாரை கடல் கொண்டதாக நம்பிக்கை நிலவியது.*

*'விண்ணவர் கோமான் மூலநூல்' என்று இந்திரன் எழுதிய ஐந்திரம் போற்றப்படுகிறது.*

## இந்திர விழா தமிழர் திருவிழா

*வடநாட்டில் ரிக்வேதத்தில் சகல சக்திகளும் பெற்ற கடவுளை இந்திரன் என்ற பெயரிட்டு அழைத்துப் போற்றினர். சிவ, விஷ்ணு புராணங்களிலும் இதிகாசங்களிலும் சிவன் மற்றும் விஷ்ணுவைப் பெருங்கடவுளர் ஆக்க விரும்பி அதற்கு முன்னர் போற்றப்பட்ட இந்திரனைக் கீழ்மைப்படுத்தத் தொடங்கினர். அதுவரை இந்திரன் விண்ணவர் கோமான் ஆக போற்றப்பட்டான்.*

*தமிழகத்தில் நடத்தப்பட்ட இந்திர விழா ஒரு கூடுகை திருவிழா. ஆண்களும் பெண்களும் நிற விளையாட்டில் ஈடுபட்டு மகிழ்ச்சியாக இருந்த நாள். பெண்களை சாந்தி செய்த திருநாள். அவனுக்கு நடத்தப்பட்ட இந்திர விழாவிற்கு பசுக்கள் எட்டுப் பேர், ஆதித்தர் பன்னிருவர், ருத்திரர் 11பேர், மருத்துவர் இருவர் என 33 தேவர்களும் 18 தேவ கனத்தாரும் வந்திருந்து விழாவைச் சிறப்பு செய்தனர். இந்திர விழா நடைபெற்ற நாளன்று அமராவதி நகரமே காலியாகி விடும் அளவுக்கு அங்கிருந்து அனைத்து தேவர்களும் பூமியை வந்தடைந்தனர். இந்திரவிழா எடுத்ததன் நோக்கத்தை*

***“பசியும் பிணியும் பகையும் நீங்கி***

***வசியும் வளனும் சுரக்க என வாழ்த்தி”***

*என்ற சிலப்பதிகார அடிகள் தெளிவாக்குகின்றன.*

### ***இந்திரன் போகியா?***

*வடநாட்டில் தைப் பொங்கலுக்கு முதல் நாள் இந்திரனுக்காக கொண்டாடப்படும் போகி அன்று அவனைப் போலவே தேவையற்ற பொருட்களைத் தீயிலிட்டு கொளுத்துகின்றனர். அது போல தீய ஆசைகளையும் இச்சைகளையும் கொளுத்திவிட வேண்டும் என்கின்றனர். அவனைப் பற்றி பல கேவலமான கட்டுக் கதைகளை உருவாக்கி விட்டனர். அவற்றில் சிலவற்றை மட்டும் இங்குக் காண்போம்.*

*இந்திரன் நளாயினியைத் தூக்கிக்கொண்டு கைலாசத்துக்கு சென்று அங்கு தனக்கு இடையூறாக இருந்த சிவனை தனது வஜ்ராயதத்தால் தாக்கினான். சிவன் இந்திரனின் வலது கை விளங்காமல் போகும்படி சபித்தார். அதனால் அவனுக்கு வலது கையில் முடக்கு வாத நோய் ஏற்பட்டது.*

*பாரிசாதனின் மனைவி வபுஷ்டமை மீது மோகம் கொண்ட இந்திரன் அவளை அடைய விரும்பி அவன் நடத்திய அசுவமேத யாகத்திற்கு கொண்டு வரப்பட்ட குதிரையின் உடலுக்குள்*

புகுந்தான். இந்திரன் துய்மன் மனைவியையும், தேவசன்மன் மனைவியையும் பாரிசாதன் மனைவியையும் கள்ளத்தனமாகக் கூடி மகிழ்ந்தான்.

முகுந்தை என்ற ரிஷி பத்தினி ருக்மாங்கதனை விரும்பினாள். ஆனால் ருக்மாங்கதன் ரிஷி பத்தினியைத் தொட மறுத்துவிட்டான். இதை அறிந்த இந்திரன் ருக்மாங்கதன் உருவத்தில் போய் அவளறியாமல் அவளை அடைந்தான்.

இவ்வாறு பல கதைகள் இந்திரனுக்கு எதிராகத் தோன்றின. இந்த இந்திரன் கதைகளுக்கும் தமிழகத்து வேளாண் குடியினரான தேவேந்திரர்களுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இவை சமயச் சழக்கர்களின் சாகசங்களால் உருவாக்கப்பட்ட கதைகள் ஆகும். இந்திர வழிபாட்டை ஒழிக்க அவர்கள் செய்த சூழ்ச்சிகளே இந்தக் கதைகளின் தோற்றம். எனவே இவற்றை குறித்து அதிகம் அக்கறை கொள்ள தேவையில்லை.

**நிறைவு**

தேவேந்திர வேளாளர் விளை நில உரிமையாளர்கள்; வேளாண் தொழில் நுட்பம் அறிந்தவர்கள் அவர்கள் ஆணின் அடையாளமாக விளங்கும் தேவேந்திரனைத் தம் குலத்தின் அடையாளமாகக் கொண்டவர்கள். வீரம் செறிந்தவர்கள், காக்கும் தொழிலை மேற்கொண்டவர்கள். குடும்ப அமைப்பைத் தோற்றுவித்தவர்கள். தமிழரின்

வீரத்துக்கும் பண்பாட்டுக்கும் சொந்தக்காரர்கள். நனி நாகரிகம் அறிந்தோர்.



## அய்யனார் வழிபாடு

***நாட்டுப்புறக்கோயில்களில் (அய்யனார்) 21 பந்தி, 63 சேனை என்று குறிப்பிடுவர். ஒவ்வொரு பந்திக்கும் 3 சேனை தெய்வங்கள் உண்டு:***

1. பிரத்யும்ய (அ) மகாராஜா
2. துலசி மாடன்
3. அக்னி வீரபத்ரர்
4. அங்காள பரமேஸ்வரி
5. வீரபாகு
6. முருகன்
7. கருப்பணசாமி
8. இருளாண்டி
9. முனீஸ்வரன்
10. அக்னி தேவன்
11. இந்திரன்
12. தர்மதேவன்
13. சோணைக்கருப்பு
14. சப்பாணி
15. பத்ரகாளி
16. வள்ளி
17. ராக்காயி
18. மூக்கையன்
19. சந்திரன்
20. மீனாட்சி
21. சதாசிவம்

இவை ஒவ்வொன்றிற்கும் 3 துணைத்தெய்வங்கள் உள்ளன. (eg.) பிரத்யும்ய ராஜா – சம்புவராஜ், மலினி மார்த்தாண்டர், பூபதி விக்ரம பாண்டியன்

வீரபாகு – கிரவுஞ்சன், மயூரன், துவஜன்

ஆக $21 \times 3 = 63$



# *2. தமிழ்நாட்டிலும் ஜப்பானிலும் இந்திரன் வழிபாடு*

*தமிழ்நாட்டில் இருந்து ஜப்பானுக்குச் சென்ற பௌத்த சமயம் இங்கிருந்து இந்திரன், காமாட்சி, சப்த கன்னி, பிரம்மா, விநாயகர் போன்றோர் வழிபாடுகளையும் கொண்டு சென்றது. ரிக் வேதத்தில் 25% இடம்பெற்றிருந்த இந்திரன் பௌத்த சமயத்தில் தேவர்களின் தலைவனாக தேவராஜா என்றும்* ***'தேவானாம் இந்திரா'*** *என்றும் போற்றப்பட்டான். பௌத்தம் தோன்றிப் பரவிய போது அதுவரை மக்களிடம் இருந்து வந்த நாட்டுப்புறத் தெய்வங்களின் வழிபாட்டை ஏதேனும் ஓர் உருவில் தனதாக்கிக் கொண்டது.*

*பௌத்த சமயத்தில் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்த இந்திரன் ஜப்பான் மொழியில்* ***தாய்ஷகோ தென்*** *என்று அழைக்கப்பட்டான். பிரம்மா* ***பொன்தென்*** *எனப்பட்டான். எமன்* ***என்ம தென்*** *என்று அழைக்கப்பட்டான். கௌதம புத்தருக்கு இருபுறமும் இந்திரனும் பிரம்மாவும் இடம்பெற்றனர்.*



## இந்திராணியைக் கைப்பற்றுதல்

இந்திராணி இருக்கும் இடமே இந்திர லோகம் எனப்பட்டது. அங்கு இந்திராணி கூட இருப்பவன் தான் இந்திரன். இவளைக் கைப்பற்றுவது ஓர் இனத்தைக் கைப்பற்றுவதற்கு சமம். எனவே அயோமுகி தன் அண்ணன் பத்மாசுரனுக்காக இந்திராணியை இழுத்துச் செல்ல முனைந்தாள். இது ஓர் இனப் போராட்டத்தின் கதை. இந்திராணிக்குக் காவலாக இருப்பவன் மகா காலன். இவன் பௌத்த தெய்வங்களில் முக்கியமானவன். இவன் இந்திராணியைக் காப்பாற்ற அயோமுகியின் கையை வெட்டிவிடுகிறான்.

இந்திராணி தங்களின் குல விளக்கு; மூதாய்; தாய்த் தெய்வம் எனக் கருதியதால் அவளைக் காப்பாற்றுவது மகா காலனின் கடமை. இந்திராணி மூங்கில் காட்டில் புகுந்து மறைந்து வாழ்ந்ததாக கந்தபுராணம் கதை கூறுகிறது. இந்திராணி ஓடி ஒளிந்ததால் அடுத்து குழந்தை



இந்திராணி தெய்வம்

பெறும் தகுதியையும் வாய்ப்பையும் அவள் மகள் தேவயானை பெறுகிறாள். அவளுக்கு அவ்வாய்ப்பு முருகனால் அளிக்கப்படுகிறது.

ஆணின் பாலியல் திறன் மிகுதியை உணர்த்த யானையை வினாயகனுக்கும் இந்திரனுக்கும் குறியீடு ஆக்கியது போலவே பெண்ணாகிய இந்திராணியின் மகளுக்கும் யானையே குறியீட்டுப் பெயர் ஆகிறது. அதனால் இவள் தேவ யானை, குஞ்சரி என்று அழைக்கப்படுகிறாள். இக் கந்த புராணத்தில் மூதாயின் [பெண்ணின்] முக்கியத்துவம் குறைக்கப்பட்டு மகன் அதாவது

இளங்குமரன் என்ற ஆண் முக்கியத்துவம் பெறுகிறான். இதுவும் பண்பாட்டு மாற்றத்தை பதிவு செய்யும் வழக்காறு ஆகும். [இம்மாற்றம் ஐரோப்பிய நாடுகளிலும் மதங்களிலும் நடை பெற்றுள்ளது].

## உலகின் மிகப் பழைய இந்திரன்

ஆப்கானிஸ்தானில் 1833 முதல் 1838 வரை நடந்த அகழ்வாராய்ச்சியில் கிடைக்கப்பெற்ற மிகப்பழைய தங்கப் பேழை ஒன்றில் இந்திரன்



*பிரமா ஆகியோருக்கு நடுவே காணப்படும் புத்தரின் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன இப் பேழை தங்கத்தால் செய்யப்பட்டு அதில் நவரத்தினங்கள் பதிக்கப்பட்டுள்ளன. இது பொது ஆண்டு அறுபதைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. ஆப்கானிஸ்தானுக்கு அருகே உள்ள ஜலாலாபாத் என்ற ஊருக்கு 11 கிலோமீட்டர் தொலைவில் பீமராங் என்ற இடத்தில் இரண்டாவது ஸ்தூபியின் கீழ் இப்பேழை அகழ்ந்தெடுக்கப்பட்டதால் இந்தப் பெட்டியை* ***பீமராங் தங்கப் பெட்டி*** *என்கின்றனர்.*

## இந்திரனின் தோற்றம்

*இந்திரன் என்பவன் இந்திராணி என்ற மூதாய்க்கு விந்து தானம் செய்கின்றவனாக ஆற்றல்மிகு தனியனாகக் கருதப்பட்டான். எகிப்தில் இருந்த* **கோடேஷு***க்கு [a male prostitute and the Holy of the Holies] நிகரானவன். இந்திராணி மாறுவதில்லை ஆனால் இந்திரர்கள் மாறுவார்கள் என்பது புராண கதை.*

*இந்திராணி என்பவள் தாய் முதன்மை சமுதாயத்தில் அதிகாரம் மிக்க தாயாக போற்றப்பட்டாள். மூதாய் என்பவள் ராணித்தேனீ போன்றவள். அவளுடைய முக்கியப் பணி ஆரோக்கியமான குழந்தைகளைப் பெற்றுத் தருவதாகும். அதற்கு உதவக் கூடியவர்கள்*

இந்திரிய தானம் செய்பவர்கள் என்ற பொருளில் இந்திரன் என்று அழைக்கப்பட்டனர். காலப்போக்கில் இக்கருத்து அவன் அதிகார மிக்க ஒருவனாகவும் அவனிடம் இந்திரிய தானம் பெற்ற பெண்கள் ஆயிரம் பேர் என மாறிவிட்டது. எனவே இவன் ஆயிரம் யோனியன் எனப்பட்டான்.

இந்திரியத்தின் நிறமான வெள்ளை நிறத்தை உருவகமாகக் கொண்டு இந்திரனுடைய யானை வெள்ளை நிறம் என்று குறிப்பிடப்பட்டது.



*யானையின் பெயரும் அவனுடைய பெயரால் ஐராவதம் எனப்பட்டது. பௌத்தம் உருவாவதற்கு முன்பு பெண் முதன்மை சமுதாயத்தில் இறுதியில் தாய்மையை அளிக்கக்கூடிய ஆண்கள் வல்லமை படைத்தவர்களாக கருதப்படும் நிலை தோன்றியது. அப்போது அது தொடர்பான குறியீடுகளைக் கொண்டே அவர்கள் குறிப்பிடப்பட்டனர்.*

*ஆணின் வீரியத்தைக் குறிக்கும் வகையில் விநாயகர் ஒற்றைக் கொம்பன் [phallic symbol] என்றும் இந்திரன் வெள்ளை நிறத்தவன் என்றும் அழைக்கப்பட்டனர். அடுத்துத் தோன்றிய பௌத்த சமயத்திலும் இக்கோட்பாடு [இந்திரனின் பெருமை] தக்கவைக்கப்பட்டது. அவன் ஆயிரம் யோனிக்கு உரியவனாக புகழப்பட்டான். பின்னர் பௌத்தம் மறைந்து வைதீக சமயங்கள் செல்வாக்குப் பெறத் தொடங்கிய போது இந்திரன் ஆயிரம் யோனி சாபம் பெற்றவனாகக் கதைகள் உருவாக்கப்பட்டன. சாபவிமோசனம் மூலமாக அவை மற்றவர்களுக்கு கண்களாகத் தோன்றும் என்று தல புராணங்கள் இயற்றப்பட்டன.*

## ***இந்திரன் கோயில் சிவன் கோயிலாயிற்று***

*புத்த கோயில்களில் பீடத்தில் ஆவுடையாருடன் கூடிய பாணம் இந்திரனின்*

*ஆண்மையின் அடையாளமாக அவனுக்கு எழுப்பப்பட்ட கோவில்களில் வைக்கப்பட்டு இருந்தது. அது போல தாரா தேவி அல்லது காமாட்சி கோயில்களில் ஆவுடை மட்டும் இடம்பெற்றது. பின்னர் சைவ சமயம் செல்வாக்குப் பெற்றபோது இந்திர பாணம் சிவலிங்கம் என்ற பெயரில் அழைக்கப்பட்டது.*

*வைதீகச் சமயங்களில் இந்திரன் தேவ ராஜாவாகப் போற்றப்பட்டாலும் அவனைச் சுற்றி அறுபதினாயிரம் அரம்பையர் இருந்தனர். அவனை போகியாகவும் ரோகியாகவும் இந்து மதம் உருமாற்றிவிட்டது. சமண சமயத்தில் இந்திரனின் செல்வாக்கு நிலைத்திருந்தது. ஆனால் சைவம் வைணவம் வந்த பிறகு இந்திரன் சபிக்கப்பட்டவனாவான்.*

### ***இந்து மதத்தின் சபிக்கப்பட்ட இந்திரன்***

*இந்திரனுக்கு எழுப்பப்பட்ட அனைத்து கோயில்களையும் பௌத்தர்கள் மருத்துவ மனைகளாகவும் பயன்படுத்தி வந்தனர். அவை பௌத்த சமயப் பள்ளிகளாக, சமய ஆராய்ச்சி கூடங்களாக, மருத்துவ ஆராய்ச்சி மையங்களாக இருந்தன. இவற்றைப் பின்னர் வந்த வைதீக சமயங்கள் இந்திரன் சபிக்கப்பட்டவன் என்றும் அவன் சாபவிமோசனம் பெற்ற இடங்களே இவை என்றும் கதை கட்டிவிட்டன.*

*இந்திரனின் குறியீட்டு வடிவத்தை சிவலிங்கம் என்ற பெயரில் வழிபடு பொருளாக மாற்றி விட்டன. காஞ்சி நகரில் இருக்கும் தேவராஜா கோவிலும் ஆரம்பத்தில் இந்திரனின் கோவிலாகவே இருந்தது.*

**கௌதம புத்தரும் இந்திரனும்**

*இந்திரன் பௌத்தத்தில் பெரும் போற்றுதலுக்கு உரியவனாக இருந்தான். அசோகரின் 'புத்த சரிதம்' தேவலோகத்தை ஆளும் 'சக்கர' என்றும் 'சக்கா' என்றும் இந்திரனை அழைத்தது. சீன நாட்டில் பௌத்தர்கள் இந்திரனை 'சாக்கியமுனி' என்றே அழைத்தனர். இந்திரன் எனப்படும் சாக்கியமுனி புத்தர் குழந்தையாய் இருந்த போது அவருக்கு 'திருமுழுக்கு' [first bath] செய்வித்தார். இதனால் கௌதம புத்தருக்கும் மூத்த முனிவராக இந்திரன் கருதப்பட்டது தெளிவாகிறது.*

**இந்து சமயத்தில் இந்திரனின் குடும்பம்**

*இந்து சமயத்தில் இந்திரனை 'போக விரும்பி' என்று சித்திரிக்கின்றனர். அவனுக்கு சித்ரகுப்தன், ஜெயந்தன் என்ற 2 மகன்களும் ஜெயந்தி தேவசேனா என்ற 2 மகள்களும் உண்டு. ஜெயந்தி சுக்கிரனையும் தேவசேனா முருகனையும் திருமணம் செய்தனர். இந்திரனின் மனைவியான இந்திராணி பூலோமன் என்ற அசுரனின் மகள்.*



எனவே அவன் பூலோமஜா என்று அழைக்கப்பட்டாள். இந்த அசுரனைக் கொன்று இந்திரன் இந்திராணியை மணந்தான். மேலும் இவள் ஏழு மாத்ரிகாக்களில் [தாய் தெய்வங்களில்] ஒருத்தியாகக் கருதப்பட்டாள். ஏழு தாய் என்பவர்கள் சப்தகன்னியர் ஆவர். சப்தகன்னியர் வழிபாடு பௌத்த சமயத்தில் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தது.

இந்திரனுக்கும் காமதேனுக்கும் பிறந்தவன் சித்ரகுப்தன் இவன் சித்ரா பவுர்ணமி என்று பிறந்தவன் ஆவான் இவன் எமனிடம் தலைமைக் கணக்கராக இருந்து பிறவி முடிந்த ஜீவன்கள் உலகில் செய்த நன்மை தீமை களை கணக்கிடும் உரிமை பெற்றவன் பௌத்தர்களின் முக்கியம் நகரமாக விளங்கிய சித்ரகுப்தனுக்கு நெல்லுகர

தெருவில் போர் கோயில் உண்டு இங்கு சித்ரகுப்தனின் சிலை ஒரு கையில் பனை ஓலைச்சுவடியையும் மறு கையில் எழுத்தாணியும் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது சித்ரா பௌர்ணமி அன்று சிறப்பு வழிபாடுகள் நடக்கும் மாலை கருணாம்பிகை என்ற தேவியுடன் சித்ரகுப்தனுக்கு திருக்கல்யாண வைபவம் நடக்கும்.



சித்திரகுப்தன் சிலை

## கேரளாவில் பௌத்த சமயமும் இந்திரனும்

கேரளாவும் இலங்கையைப் போல ஒரு காலத்தில் பௌத்த சமயம் செல்வாக்கு பெற்றிருந்த பகுதியாகும். அங்கு இந்திரனின் பெயர் இன்றளவும் மக்கட் பெயர்களில் இருந்து வருவதைக் காணலாம். பின்னர் அங்கும் சைவ சமயச் செல்வாக்கு வளர்ந்த போது பெயர்களும் சிறிது மாறத் தொடங்கின. அங்குப் பரவலாக காணப்படும் சுரேந்திரன் என்பது தேவர்களின் தலைவனான இந்திரனைக் குறித்தது; இது பின்பு சுரேஷ் என்று மாறியது. சுரேஷ் என்றால் கடவுளரின் தலைவனான ஈசன்; ஈஸ்வரன் என்று வழங்கலாயிற்று. சைலேந்திரன் என்றால் மலைகளின் தலைவன் என்பது பொருள். இப்பெயர் சைலேஷ் - மலைகளின் ஈசன் என்ற பொருளில் இப்போது ஆட்களுக்கு சூட்டப்படுகிறது.

## பௌத்தத்தை அழிக்க பரசுராமனின் கதை

கேரளாவில் இந்திரனை பெண் பித்தன் என்று நம்ப வைப்பதற்காக அகலிகை கதை உருவானது. அகலிகையை நிறையழித்த இந்திரன் பூனை வடிவெடுத்து ஓடி மறைந்தான். இவ்வாறு இந்திரனை குறித்து இழிவான கதைகளைப் பரப்பி இந்திர வழிபாட்டை அப்புறப்படுத்தினர். இதனால் கேரளத்தில் பௌத்தம் அழிந்து சைவ

வைணவ சமயங்கள் தலைதூக்கின. வழிபடும் தெய்வங்கள் மாறினாலும் அவர்களின் பண்பாடும் பழக்க வழக்கங்களும் பௌத்த சமயத்தைப் பின்பற்றியே இருக்கின்றன.

## மருத நிலத்தலைவன் வேந்தன் அல்லது இந்திரன்

சங்க இலக்கியத்திற்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியம் ஆறுகள் நிறைந்த மருத நிலப்பகுதிக்குத் தலைவனாக வேந்தன் அல்லது இந்திரனைக் குறிக்கின்றது. ஆற்றுப் பாசனத்தில் நெல் விளைச்சலில் ஈடுபட்டுள்ள மருதநிலத்தைச் சேர்ந்த மள்ளர் எனப்படுவோர் தங்களை தேவேந்திர குல வேளாளர் என்று அழைக்கின்றனர். இவர்கள் இந்திரனின் வாரிசுகளாக கருதப்படுகின்றனர். சேற்றுக் கால் செல்வர் எனப்படும் மருத நிலத்து மள்ளர்கள் நெல் வேளாண்மையை தன் முதன்மைத் தொழிலாகவும், முக்கிய தொழிலாகவும் கொண்டவர்கள். இவர்கள் இன்றும் தேவேந்திரனோடு தம்மை தொடர்புபடுத்தி பெருமை அடைகின்றனர்.

## இந்தியாவில் இந்திரனின் விழா

தமிழகத்தில் சிலம்பும் மணிமேகலையும் இந்திரவிழா பற்றி சிறப்பாக எடுத்துக் கூறுகின்றது. இந்திரவிழா வடநாட்டில் ஹோலி என்ற பெயரில்

பங்குனி பௌர்ணமி அன்று கொண்டாடப்படுகிறது. அன்று அங்கு நீர் விளையாட்டு நடத்துவர். பிற்காலத் தமிழகத்தில் இந்திர விழா பங்குனி பவுர்ணமி அன்று காமன் பண்டிகை அல்லது காமன் விழாவாக கொண்டாடப்பட்டது. அவ்விழாவன்று ஆணும் பெண்ணும் ஆற்றங்கரையிலும் கடற்கரையிலும் கோடி நிலவொளியில் ஆடிப்பாடி மகிழ்வர்.

இந்திர விழாவை தீவகச் சாந்தி விழா என்று அழைத்தனர். தீவகச் சாந்தி என்பது பெண்ணை சாந்தி செய்யும் திருநாள் ஆகும். இந்நினைவைப் போற்றும் வகையில் கோயில்களில் தெய்வீகத் திருமணங்கள் யாவும் பங்குனி உத்தரம் அல்லது பங்குனி முழுநிலவு நாளன்று தமிழகம் முழுவதும் நடைபெறுகின்றன. சாஸ்தா புஷ்கலா பூரணி திருமணம்; முருகன் தெய்வானை



*திருமணம்; சிவன் பார்வதி திருமணம் ஆகிய அனைத்தும் பங்குனி உத்தரத்தன்று நடைபெறுவது வழக்கம். திருமலை நாயக்கர் காலத்தில் மதுரையில் மட்டும் மீனாட்சி சொக்கர் திருமணம் சித்ரா பவுர்ணமியுடன் இணைக்கப்பட்டது.*

***காமன் பண்டிகை***

*பங்குனி உத்தரத்தன்று அல்லது பங்குனி முழு நிலா நாளன்று இந்திர விழா கொண்டாடப்பட்டு வந்த நாட்களில் காதலுக்கும் காமத்திற்கும் பெருமதிப்பு அளிக்கப்பட்டது. பழங்காலத்தில் முழு நிலவில் உறையூரிலும் திருவரங்கத்திலும் காவிரி ஆற்றின் இடையே இருந்த மணல் திட்டுகளில் ஆடவரும் மகளிரும் தத்தமக்கு விருப்பமான இணைகளுடன் கூடி மகிழ்ந்தனர். பின்னர் அதே நாள் சிவன் காமனை [மன்மதன்] எரித்த நாள் என்று அவ்விழாவின் காரணம் மாற்றப்பட்டது சிவன் தன் தவத்தைக் கலைத்த காமனை நெற்றிக்கண்ணால் சுட்டெரித்தார் என்று இந்நாளில் காமன் பண்டிகை காரணம் கூறப்பட்டது.*

*பௌதத்தில்; சகஜபாவம் என்பது ஆண்-பெண் உறவை மேன்மைப்படுத்திப் பாடியது. இப்பாடல்கள் பெண்ணின் பெருமை கூறுவனவாக இருந்தன; அல்லது பெண்ணின் இன்றியமையாமையை எடுத்துரைத்தன.*

காமன் பண்டிகையில் இருதரப்பினர் மாற்றி மாற்றி ஒருவர் கேட்கும் கேள்விக்கு மற்றொருவர் பதில் அளிப்பதாக இப்பாடல்கள் அமைந்து போட்டி பாடல் போன்ற ஒரு தோற்றத்தை கொடுத்தன. காமன் பண்டிகை கேட்கவரும் மக்கள் இதனை வெகுவாக ரசித்தனர். தமிழகத்தில் காமன் பண்டிகை திமுக ஆட்சிக் காலத்திற்கு முன்புவரை அதிக அளவில் நடைபெற்று வந்தது பின்னர் அருகி விட்டதைக் காண்கிறோம்.

இந்திரனையும் ஆண்-பெண் உறவையும் மதித்து போற்றிய காலத்தில் பௌத்தத்தின் சகஜ பாவப் பாடல்களும் ஆட்டங்களும் போற்றுதலுக்கு உரியனவாகத் திகழ்ந்தன. இவை இம்மண்ணின் கலைகளாக இருந்த நிலை மாறிப் போய் கோயில் கலைகளில் இருந்து மெல்லப் பிரிந்து வந்துவிட்டன. பிறகு நாட்டுப்புற ஆட்ட வகைகளில் ராஜா ராணி ஆட்டத்தில் மட்டும் பெண்ணின் இன்றியமையாமை பற்றிய சகஜ பாவப் பாடல்கள் இடம் பெற்றன. இப்போது ராஜா ராணி ஆட்டம் என்பது பெண்களைக் கேலி செய்யும் கருத்துக்களையே பெரும்பாலும் தம் பாடல்களில் வெளிப்படுத்துகின்றன. ஆயினும் அவை பெண் தெய்வங்களின் பெயர்களை வரிசையாக எடுத்துரைத்து அவற்றின் பெருமைகளை முன்னுரைத்து பின்னர் கேலிக் கூத்தாக்கிவிடுகின்றன.

## ***ஜப்பானில் இந்திரன் - முதன்மைத் தெய்வம்***

*ஜப்பானில் பௌத்தம் இன்றும் செழிப்பாக இருப்பதால் அங்கு இந்திரனை* ***தாய்ஷாகுதென்*** *என்ற பெயரில் முதன்மைத் தெய்வமாகப் போற்றி வணங்குகின்றனர். அங்கு இந்திரன் நான்கு திசை காவலரின் [****ஷிக்கொகுதென்****] காவல் தலைவன் ஆவான். இவர் நடுவில் இருந்து நான்கு திசை காவலரையும் அதிகாரம் செய்வான். தோக்கியோவுக்கு அருகில்* ***கத்சுஷிகோ*** *என்னும் இடத்தில் உள்ள புத்த கோயில் இந்திரனுக்குரிய தனிக் கோயில் ஆகும். இக்கோயில்* ***ஷிபாமாதா தாய்ஷி*** *என்றும் தாய்கியோஜி என்றும் அழைக்கப்படுகின்றது. இக்கோயிலில் இரண்டு வாயில் உள்ளது. இக்கோயில் அதன் மரச் சிற்ப வேலைப்பாடுகளுக்காகப் புகழ் பெற்ற சுற்றுலாத் தலமாக விளங்குகிறது. எதோ [Edo] எனப்படும் மன்னர் வமிசத்தினரின் ஆட்சிக் காலத்தில் இருந்து இந்திரன் தனிப்பெரும் தெய்வமாக வணங்கப்படுகிறான். இவன் சந்நிதி வாசலின் இருபுறமும்* ***விருத்தகன், விருபாக்ஷன்*** *ஆகியோர் நிற்கின்றனர்.*

## ***ஜப்பானில் இந்திரனும் மற்ற காவல் தெய்வங்களும்***

*ஜப்பானில் காவல் தெய்வங்கள் பன்னிருவரில் முதன்மையானவன் இந்திரன். இவனது பெயர் தாய்ஷாகுதென். நெருப்பை* ***கா***

**தென்,** எமனை **என்ம தென்,** நிருதியை **ரசெத்சு தென்**, காற்றை **ஃபு தென்,** குபேரனை **இஷானா தென்**, வருணனை **சுயி** தென், பிரம்மாவை **பொன் தென்**, பிருத்வியை **ச்சி தென்**, சூரியனை **நித் தென்**, சந்திரனை **கத் தென்** என்றும் ஜப்பானில் அழைக்கின்றனர். தென் என்பது ஆண் தெய்வத்தை குறிக்கிறது. தெ என்பது தெய்வத்தையும் ன் என்பது ஆண்பாற்பெயர் விகுதி போல இடம்பெறுகிறது. இந்த பன்னிருவருக்கும் தலைமைத் தெய்வமாக இந்திரன் விளங்குகிறான்.

## தமிழகத்தில் இந்திரன் கோயில்கள்

தமிழகத்தில் இந்திரனின் கோயில்கள் பின்னர் சிவன் கோயில்களாக மாற்றப்பட்ட போது இந்திரனின் சஹஸ்ர யோனி என்ற தனித்தன்மையை மறைக்க இயலாமல் சகஸ்ர நேத்ர என்றே சிவன் கோயில்களில் உள்ள சிவனை மக்கள் அழைத்தனர். பவுத்தம் செல்வாக்குப் பெற்றிருந்த திருச்சி, தஞ்சை, நாகப்பட்டினம் பகுதிகளில் தாம் வணங்கும் இறைவனுக்கு ஆயிரம் கண்கள் உண்டு என்பதை வலியுறுத்தும் வகையில் பல கோயில்களில் இறைவனின் பெயர் கண்ணாயிரநாதர் என்றோ கண்ணுடன் தொடர்புடைய வேறு பெயராகவோ இன்றைக்கும் அழைக்கப்படுகிறது. மற்ற

ஊர்களில் இத்தகைய பெயர் நிலைப்பாட்டை காண முடியவில்லை.

வைத்தீஸ்வரன் கோயிலுக்கு ஐந்து கிலோமீட்டர் தொலைவிலிருக்கும் திருக்கண்ணார்கோவில் முன்பு இந்திரனின் கோயிலாக இருந்து பின்னர் சுசிவன் கோயிலாக மாற்றம் அடைந்திருக்கும். இங்குள்ள விநாயகரின் பெயர் கன்னி விநாயகர் ஆகும். இங்கு முருகன் கோவில் இருக்க வேண்டிய இடத்தில் மூதேவி எனப்படும் ஜேஷ்டா தேவியின் பிந்தைய வடிவமான கஜலட்சுமி சந்நிதி அமைந்துள்ளது.

சிவலிங்கத்தின் பாணம் இந்திரனை உணர்த்தும் வகையில் உயரமாகவும் அதில் ஆயிரம் கண்கள் இருப்பதைப் போல நிறைய பள்ளங்களும் கொண்டு இருக்கின்றன. இந்திரனின் கோவில்கள் சிவனின் கோவில்களாக மாற்றப்பட்டாலும் கண்ணாயிரம் என்பது நிலை நிறுத்தப்பட்டதால் இவை கண்களுக்கு சிகிச்சை அளிக்கும் தலங்களாகவும் நிலைபெற்றுவிட்டன. மக்களும் அவ்வாறே நம்பி வருகின்றனர்.

**திருக்காரவாசலில்** கண்ணாயிர நாதர் கோயில் உண்டு. **பனையபுரத்தில்** திருகண்ணமர்ந்த நாயனார் என்றும் ரெட்ட வயலில் கண்ணாயிரம் மூர்த்தி என்றும் சிவன் அழைக்கப்படுகிறார்.

*ரெட்டவயலில் ஆண்கள் மட்டுமே வழிபடுகின்றனர். **கருங்குழி** என்ற ஊரில் திருக்கண்ணார் என்பது இறைவனின் பெயராகும். இந்திரன் சாபம் நீக்கும் ஐராவதம் என்ற யானை இங்கு சிவன் முன்பு நிறுத்தப்பட்டுள்ளது அதற்குப் பின்னால் நந்தி பிற்சேர்க்கையாகக் காணப்படுகிறது. இதை இந்திரன் சாபம் நீங்கிய தலம் என்றே குறிப்பிடுகின்றனர்.*

***திருகண்ணக்குடியில்*** *கண் மருத்துவர்கள் வாழ்ந்த ஊர் என்பதால் இங்கிருக்கும் விநாயகர் நேத்திரம் சயரோக நிவாரண விநாயகர் எனப்படுகின்றார். குறு மா என்றால் வட மொழியில் பூனையை குறிக்கும். இந்திரன் பூனை வடிவெடுத்ததை குறிக்கும் வகையில் ஒரு*



*திருக்காரவாசல் கோவில்*

அவனுக்கு கோயில் உள்ள ஒரு ஊர் குறுமானக்குடி எனப்படுகிறது. இங்குள்ள **திருக்கண்ணார் கோயிலில்** ஆண்டவன் கண்ணாயிரநாதர் என்று அழைக்கப்படுகிறார்.

**கண் பெயரில் பெண் தெய்வப் பௌத்தக் கோயில்கள்**

**கருவலூரில்** ஆயிரம் கண்ணுடையாள் வழிபடப்படுகிறாள். இது புத்த கோயில்களில் பெண் தெய்வக் கோயில் என்பதை ஆயிரம் கண்ணுடையாள் என்ற சொல் குறிக்கிறது. கண் என்பது காலப்போக்கில் பௌத்த கோயிலைக் குறிக்கும் பொது வழக்காகி விட்டதை காண்கிறோம். சமயபுரத்தையும் கண்ணபுரம் என்றும் **கண்ணனூர்** என்று அழைப்பதால் இதனைப் புரிந்து கொள்ளலாம். இந்த ஊர் கங்காதீஸ்வரர் வழிபட்ட காமதேனு எழுந்தருளியுள்ள ஊர் ஆகும். காமதேனு என்பது காமத்திற்கு அதிபதியான பெண் கடவுளை குறிக்கும் அடையாளம். இது கருவை விழுங்கி கன்றினைத் தந்த ஊர் என்று அழைக்கப்படுகிறது.

**திருக்காட்டுப்பள்ளி**யில் நேத்திர புரீஸ்வரர் காமாட்சி அம்மாள் வழிபடு தெய்வங்களாக உள்ளனர். இவ்விரு தெய்வங்களும் பௌத்த சமயத்தின் தெய்வங்களான இந்திரனையும் காமாட்சியையும் குறிப்பனவாகும்.



**அஞ்சனம் தீட்டும் சிகிச்சை நடைபெற்ற திருத்தலங்கள்**

கண்ணியார் கோவிலில் நேத்ரபாலீஸ்வரரும் நீலோத்பலாம்பிகையும் தெய்வங்களாக

உள்ளனர். குண்டையூரில் கண் கொடுத்த பொற்றாமரைக் குளம் உள்ளது. திருக்கச்சூரில் அம்பிகையை அஞ்சனாட்சி என்ற பெயரில் வணங்கப்படுகின்றனர். இறைவன் மருந்தீஸ்வரர் அல்லது வைத்தியநாதர் எனப்படுகிறார். இப்பெயர்கள் இங்குக் கண்ணுக்கு அஞ்சனம் தீட்டப்பட்ட சிகிச்சை நடைபெற்றதைக் குறிக்கின்றது. இக்கோயிலில் பிரம்மன் சதுர்முக சண்டிகேஸ்வரர் என்ற பெயரில் வழங்கப்படுகிறார்.

கண்ணுக்கு அஞ்சனம் தீட்டும் மருத்துவ சிகிச்சையைப் செய்து வந்த மருத்துவர்கள் இந்த புத்த விகாரங்களில் முன்பு இருந்தனர். சுசீந்திரத்தில் அஞ்சனம் எழுதிய கண்டன் சாஸ்தா என்ற கோயில் உள்ளது. இங்கு இப்பொழுதும் கண்ணில் அஞ்சனம் எழுதப்படுகிறது.

## ஜேஷ்டா தேவி கோயில்

ஜேஷ்டா தேவி புத்த தெய்வங்களில் ஒன்று என்பது குறித்து அறிவோம். திருவாரூரில் இருந்து பதினெட்டு கிலோமீட்டர் தூரத்தில் இருக்கும் இந்திரன் சாபம் பெற்ற ஊரான **கைச்சினநாதன்** கோவிலில் இந்திரன் சிவலிங்கத்தை தன் கையால் பிடித்து அழுது மன்றாடி சாப விமோசனம் பெற்றதாக தலபுராணம் விரித்துரைக்கின்றது. இதனால் சிவலிங்கத்தில் விரல் ரேகை

காணப்படுவதாகவும் கதை வழங்கப்படுகிறது. இது இந்திரன் கோவில் என்பதற்கு அடையாளமாக இன்றும் இங்கு ஜேஷ்டாதேவிக்கு தனிச் சந்நிதி உண்டு. இது தவிர இங்கு கோஷ்டங்களில் ஜேஷ்டாதேவி, துர்கா, சரஸ்வதி ஆகியோர் காணப்படுகின்றனர். இறைவி வெள்வளை நாயகி என்று அழைக்கப்படுகிறாள்.

## பெருமாள் கோயிலாக மாறிய இந்திரன் கோவில்

காஞ்சிபுரத்தில் உள்ள அத்திவரதர் கோவில் அங்கு பௌத்தம் செல்வாக்கு பெற்றிருந்த காலத்தில் இந்திரனுக்குரிய கோவிலாக விளங்கியது. அவனது வெள்ளை யானை அத்திகிரி என்று சமஸ்கிருதப் பெயர் மாற்றம் பெற்றது. பௌத்த தெய்வங்களான பிரம்மா, சரஸ்வதி தொடர்பான கதைகள் வைணவச் சாயம் பூசப்பட்டன. சரஸ்வதி தன்னை அழைக்காமல் யாகம் நடத்திய பிரம்மனை சபித்து அவனது சத்திய விரத சேத்திரத்தை (காஞ்சிபுரத்தை) இருளில் மூழ்கடித்தாள். இதன் பிறகு வைணவக் கதை தொடங்குகிறது. அங்கு கிழக்கு ஒளியாக பெருமாள் தோன்றினார். சரஸ்வதி தன் சக்தியைக் கொண்டு கருங்காளியை திருமாலுடன் போர் புரிய அனுப்பினாள். கருங்காளியை திருமால் கொன்று அழித்தார். ஒரு மைல் தொலைவில் கருங்காளிக்கு ஒரு கோவில் உண்டு.

**ஓம் பத்மம் மணி ஹ்யும்**

இந்திரன் வழிபடப்பட்ட இக்கோயிலில் ஆவுடையாருடன் கூடிய பாணம் என்பது புத்த சமயத்தின் ஓம் பத்மம் மணி ஹ்யும் என்ற தாமரை சூத்திரத்தின்படி அமைந்த பௌத்த வழிபாட்டு வடிவம் ஆகும். பத்மம் என்பது பெண்ணையும் மணி என்பது ஆணையும் குறிக்க, இந்த இரு குறியும் இணைந்து உறவு கொள்ளும் வடிவமாக இவ் வழிபாட்டு வடிவம் அடையாளப்-படுத்தப்பட்டு இருந்தது.

புதிய சிவன் கோயில்களில் பெயர் மாறினாலும் கதை மாறினாலும் கருத்து மாறாமல் மக்கள் மனதில் நிலைத்துள்ளது. இங்கு வாழ்ந்து வந்த மக்கள் கண்ணாயிரம் என்ற இந்திரனின் பெயரை மறக்காமல் சிவனைக் கண்ணாயிரநாதர் என்று அழைத்து வருகின்றனர். ஜப்பான் நாட்டில் இந்திரனை பற்றிய உயர்வான எண்ணமே இருப்பதால் அங்கு இன்றும் இந்திரன் தாய்ஷகொதென் என்ற பெயரில் உயர் தனித் தெய்வமாகக் கோயில் கொண்டுள்ளான்.



# *3.* இந்திர வழிபாடும் வேளாண் சமூகமும்

இந்திரன் வேதக் கடவுள் என்றும் புராணக் கடவுள் என்றும் கருதப்படுகிறான். ரிக் வேதத்தில் கால்வாசி சுலோகங்கள் இந்திரனைப் பெருங்கடவுளாகப் போற்றுகின்றன. இந்திரர்கள் மூவர் என்றும் இவர்களில் இருவர் இந்தியத் தமிழர் என்றும் மூன்றாமவர் அந்நிய நாட்டு இந்திரனுக்கும் பாண்டிய இளவரசியான தமிழ்ப் பெண்ணுக்கும் பிறந்த செங்குட்டுவன் என்ற செவ்வாய் என்பாரும் உண்டு. இந்தியத் தமிழர் எனப்படும் இந்திரர்களை ஒருவர் கிருஷ்ணர் என்ற கரவேல் என்றும் அடுத்தவர் திருமால் என்ற செம்பியன் அல்லது கரிகாற்சோழன் என்றும் கருதுகின்றனர்.

இந்திரனை திருமால் அல்லது கிருஷ்ணனுடன் சேர்த்து உறவுபடுத்துவதற்கு முக்கிய ஆதாரம் அவனது இந்திரானுஜன் என்ற பெயர் விஷ்ணுவைக் குறிப்பதாகும். அனுஜன் என்றால் இளைய சகோதரன்; இலக்குவனை இராமானுஜன் என்பர். அது போல இந்திரானுஜன் என்பவன் இந்திரனின் தம்பி விஷ்ணு என்பதால்

முதலில் வந்தவன் இந்திரன் அடுத்து வந்தவன் திருமால் என்று புரிந்துகொள்ளப்பட்டது. இந்திர வழிபாட்டுக்குப் பிந்தியது கிருஷ்ண வழிபாடு என்பது தெளிவாகிறது.

ரிக் வேதத்தில் போற்றப்பட்ட இந்திரன் அடுத்து கி மு ஆறாம் நூற்றாண்டை ஒட்டி எழுதப்பட்ட புராணங்களிலும் இதிகாசங்களிலும் பெண் பித்தனாக இழிவு செய்யப்பட்டான். கிமு ஐந்தாம் நூற்றாண்டில் வியாச பாரதம் வந்ததாக அறிகிறோம். கி.மு. மூன்றாம் நுற்றாண்டில் எழுதப்பட்ட சிலப்பதிகாரம் இந்திர விழா சிறப்பாக ஆண்டுதோறும் கொண்டாடப் பட்டதை இயம்புகிறது. இந்திர விழா கொண்டாடப்படாவிட்டால் நாடு வறட்சிக் கொடுமையில் சிக்கித் தவிக்கும் என்பதையும் எடுத்துக் கூறுகிறது. மணிமேகலையும்



இக்கருத்துக்களை வழி மொழிகிறது. பசியும் பகையும் பிணியும் நீங்கி வசியும் வளனும் சுரக்க இவ்விழா கொண்டாடப்பட்டது.

## தமிழகத்தில் ஆரியர் வருகை

ஆரியர் இந்தியாவுக்குள் கி.மு. பதினோராம் நுற்றாண்டில் வந்தாலும் தமிழகத்துக்கு அவர்கள் வந்தது கிமு ஏழாம் நூற்றாண்டு என அறிஞர்கள் கருதுகின்றனர். அப்போது இங்கு இந்திரன் வழிபாடு சிறப்பாக நடைபெற்றதை அறிகிறோம். இலங்கையின் வரலாறு கூறும் மகாவம்சம் ஆரியனான கலிங்க நாட்டின் மன்னன் விஜயன் பாண்டியனின் மகளை மணந்து கி.மு. 543இல் இலங்கைக்குச் சென்றான் என்கிறது கலிங்க அரசன் கி மு 165இல் தோற்றுவித்த கல்வெட்டு ‘தமிழகத்தில் 1,300 ஆண்டுகளாக ஆண்டு வந்த தமிழ் மூவேந்தர்களின் ஒற்றுமையைச் சிதைத்ததாகத்’ தெரிவிக்கிறது. ஆக ஆரியர் வரவுக்கு முன்பே தமிழ்நாட்டில் இந்திர விழா சிறப்பாக நடைபெற்றது.

## இந்திர விழா

தமிழகத்தில் மருத நிலத் தலைவனான வேந்தன் அல்லது இந்திரன் ஆண்மையின் சின்னமாக வணங்கப்பட்டான். அவனது விழா காமன் விழா நேரும் காதல் விழா என்றும் விருந்தாட்டு விழா என்றும் வழங்கப்பட்டது.

தீவகச் சாந்தி விழா என்றும் அழைக்கப்பட்டது. முழு நிலவு நாளன்று ஆற்றங்கரையிலும் கடற்கரையிலும் ஆணும் பெண்ணும் கூடி மகிழும் இவ்விழா பெண்களைச் சாந்தி செய்யும் விழாவாக கருதப்பட்டது. தீவகச் சாந்தி என்பது 'கூடலைக்' குறித்தது. இதுவே காலப்போக்கில் பங்குனி முழு நிலவன்று காமன் விழா என்றும் தமிழகத்தில் காமன் பண்டிகை என்றும் வழக்கில் தொடரலாயிற்று. இவ்விழா பெண்ணின் பெருமை சாற்றும் விழாவாக தோன்றினாலும் ஆண்மையின் சிறப்புணர்த்தும் விழாவாக இருந்ததனால் இந்திரனின் பெயரால் அழைக்கப்பட்டது.

## இந்திரனின் பெயரைக் கெடுத்த வைதீக சமயம்

இந்திரன் ஆதிகாலந்தொட்டு பெருங்கடவுளாக வலிமை மிகுந்த கடவுளாகப் போற்றப்பட்டு வந்தான். சமண பவுத்த மதங்கள் அவனை தேவர்களின் தலைவன் என்றும் தேவ ராஜா என்றும் போற்றி புகழ்ந்தன. இந்து மதத்தில் பின்னர் தோன்றிய சைவ வைணவ தாக்கம் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் இந்திரனை எதிரிக் கடவுளாக உரு மாற்றிக் காட்டியது. சிவன் மற்றும் திருமாலின் உயர்வை நிலை நிறுத்த விரும்பிய இச்சமயப் பிரிவுகள் இந்திரனைக் கெட்டவனாகவும் பெண் பித்தனாகவும் கதைகளை கட்டி விட்டன. சிவனால் இந்திரனுக்கு

*சாபம் கிடைத்ததாகக் கூறி பல தல புராணக் கதைகளை உருவாக்கினர். இந்திரனின் ஆண் குறி அடையாளம் [PHALLIC SYMBOL] வைக்கப்பட்ட வழிபாட்டுத் தலங்களை சிவலிங்கம் என்று பெயர் மாற்றி அருவுருவக் கோட்பாட்டைப் பரப்பி தல புராணக்கதைகளை உருவாக்கி இந்திர வழிபாட்டை நசுக்க முனைந்தனர்.*

**வேளாண்மையும் தந்தைமையும்**

*தாய் முதன்மை சமுதாயத்தை அடுத்துத் தோன்றிய தந்தை முதன்மை சமுதாயத்தின் அடையாளமே ஆண் குறி வழிபாடு ஆகும். தந்தைமை [FATHERHOOD] என்பதன் ஆதி காரணத்தைப் புரிந்து கொண்ட மனிதனின் அறிவியல் மனித சமுதாயத்தின் மந்திரச்சமய [MAGICO RELIGION] நம்பிக்கையையும் பண்பாட்டையும் முற்றிலுமாக மாற்றிவிட்டது. மண் சார்ந்த மக்களின் உணவு உற்பத்தி செய்யும் [வேளாண்] வாழ்க்கை முறைக்கும் குடும்பம் என்ற அமைப்பின் தோற்றத்துக்கும் ஆதாரமாக ஆண் குறி வழிபாடு அல்லது இந்திர வழிபாடு அமைந்தது. இத்தகைய இந்திர வழிபாடு இந்தியாவில் மட்டுமின்றி வெளிநாடுகளிலும் காணப்பட்டது. அங்கும் மழைக்குரிய கடவுளாகவும் மக்கட் பேறுக்குரிய கடவுளாகவும் இந்திரன் வழிபடப்பட்டான்.*

குழந்தை பேறு என்பது ஆணின் பங்கேற்பையும் கொண்டுள்ளது என்பதை உணர்ந்ததில் இருந்து தந்தை முதன்மை சமுதாயம் தோன்றத் தொடங்கியது. அது வரை குழந்தைப் பேறு என்பது தாயுடன் மட்டுமே தொடர்புடையதாக நம்பப்பட்டது. மனிதனை இவ்வறிவை உணர்த்தும் வகையில் இந்திரனின் கதையில் ஓர் கூறு அமைந்திருப்பதை எடுத்துக் காட்டலாம். இந்திரன் அகலிகை கூடல் நடந்த பிறகு கவுதம முனிவர் இந்திராணி சபித்து அவந்தி விரைப்பைகளை அற்று விழும்படி சபித்து விடுவார். விரைப்பையில் உள்ள விந்தணுக்கள் மனித உயிரை உருவாக்கும் உயிரணு என்பதை உணர்ந்ததன் விளைவு இந்திரனுக்கு அளித்த இந்தச் சாபம் ஆகும்.

இந்திராணிக்கும் இந்திர லோகத்தில் இருக்கும் அறுபதினாயிரம் அரம்பையருக்கும் இந்திரிய தானம் செய்ய வேண்டிய இந்திரன் விரைப்பை இல்லாமல் இருந்தால் பயனற்றுப் போவான் என்று தேவர்கள் கவலைப்பட்டு ஆட்டுக் கிடாயின் விரைப்பைகளை அவனுக்குப் பொருத்தினர். இக்கதையினாலும் இந்திரன் ஆண்மையின் சின்னமாக விளங்கினான் என்பது பெறப்படும்.

### சமணத்திலும் பவுத்தத்திலும் இந்திரன்

இந்தியாவில் சமணர், பௌத்தர் மற்றும் இந்துக்கள் எனப்படும் மூன்று பிரிவினரும்

இந்திரனை வழிபடும் தெய்வமாகக் கொண்டிருந்தனர். தேவர்களின் தலைவனான இந்திரன் போற்றப்பட்டான். தாய்லாந்து நாட்டில் இந்திரனின் ஐராவதம் அரசுச் சின்னமாக விளங்குகிறது. இந்திரனை ஸ்வதர்மேந்திரா என்று சமணர் அழைக்கின்றனர். இவர் சவான், ஜன்மா, திக்க்ஷா, கேவல ஞானம் மற்றும் நிர்வாணம் ஆகிய ஐந்து நிலைகளை அடைந்தார்.

பவுத்தர் இந்திரனை 'சாகா' [CHAKA] என்ற பெயரில் அழைக்கின்றனர். புத்தருக்கு திருமுழுக்கு அளித்தவன் இந்திரன் என்று பௌத்த மதம் கூறுகின்றது. சாகா என்ற பெயரிலிருந்து தோன்றிய மதமே பவுத்தம் எனப்படும் சாக்கிய மதம் ஆகும். தமிழகத்தில் பவுத்தர்கள் சாக்கியர் என்று அழைக்கப்பட்டனர். சைவ சமய நூல்கள் பவுத்தர்களை சாக்கியர் என்று அழைத்துக் கேவலமாக ஏசுவதை சைவத் திருமறையில் காணலாம். சாக்கிய முனி என்று புத்தரை பவுத்தர் போற்றுகின்றனர். சாக்கியன் என்ற பெயரை சாஸ்தா என்று இன்றைக்கு குறிப்பிடும் இந்து சமயத்தின் ஐயப்பன் வழிபாடு ஆதியில் பவுத்த சமயம் சார்ந்ததாகக் கருதப்படுகிறது.

### ஜப்பானிலும் சீனாவிலும் இந்திரன்

பௌத்த சமயத்தினர் ஜப்பானில் இந்திரனைப் பெருங்கடவுளாகப் போற்றுகின்றனர். ஜப்பான்

*மொழியில் தாயி என்றால் பெரிய என்பது பொருள். ஜப்பான் மொழியில் இந்திரனை தாயி ஷாகூ தெம் [சாகா தெய்வம் அதாவது தமிழில் வழங்கும் சாக்கிய முனி; பெரிய சாக்கியக் கடவுள் என்று ஜப்பானிய மொழியில் பொருள்படும்] பிரம்மனை பொான் தெம் என்பர். சீன மொழியில் இந்திரனை பின் யின் மற்றும் ஷி தி ஹுவான் யின் என்றும் குறிப்பிடுவர். கொரியாவில் ஜெசியோக் சியோன் என்றும் ஹவான் தின் என்றும் வாங்குவர். நெருப்பை வணங்கும் சோரோஸ்டிரியன் சமயத்தார் இந்திரனை 'தேவா' என்பர். சிரியாவில் ஹுரியன் மொழி பேசும் மக்கள் 'இந்தாரா' என்று இந்திரனை அழைக்கின்றனர்.*

## இந்திரனைப் போன்ற பெருங்கடவுளர்

*அரபு நாட்டில் இனாரா என்ற பெயரில் வழிபட்ட கடவுள் இந்திரனின் பண்புகளை ஒத்தவனாக இருந்தான். அலெக்சாண்டர் என்ற கிரேக்க மன்னனின் பெயரை அலெக்ஸ் இன்ட்ரா எனப் பிரித்துப் பொருள் காண வேண்டும் என்று கூறுவோரும் உளர். ரோமானிய நாட்டைச் சேர்ந்த நாடோடிகளான ரோமர் இன மக்கள் இந்திரா [INDRA] என்ற பெயரில் ஒரு தெய்வத்தை வழிபட்டனர்.*

*வேளாண்மைக்கும் வீரத்துக்கும் காரணமாக விளங்கும் கடவுளை இந்தியாவில் இந்திரன் என்று பெயரிட்டு அழைப்பது போல பிற*

நாடுகளிலும் இவ்விரண்டு பண்புகளுக்கும் காரணமான கடவுள் பெருங்கடவுளாகக் கருதப்பட்டு பல்வேறு பெயர்களால் அழைத்தனர். ஜெர்மன் நாட்டில் ஒடன் *[woden, the supreme god of Germany]* என்றும் கிரேக்கத்தில் ஜீயஸ் *[zeus]* என்றும் ரோமர்களிடம் ஜூபிட்டர் என்றும் பெருங்கடவுளாக வணங்கப்பட்டவர் இந்திரனுக்கு நிகரான ஒரு தெய்வமாவர். இக்கடவுளர் வேளாண்மைக்குக் காரணமான மழைக்கும் நிலவுடைமைக்குக் காரணமான வீரத்துக்கும் உரியவர் ஆவர். இவர்களும் இந்திரனைப் போன்று தேவர்களின் தலைவனாக அல்லது நல்லவர்களின் தலைவனாக போற்றப்படுவது உலகெங்கும் காணப்படும் பொதுப் பண்பாகத் திகழ்ந்தது. இந்தியாவைப் போலவே பிற நாடுகளிலும் இன்று இந்திர வழிபாடு கிடையாது. இங்கு இந்து சமயம் வளர்ந்ததைப் போல அங்கு கிறிஸ்துவம் வளர்ந்து விட்டது. கிறிஸ்தவம் பாலுறவை ஜென்ம பாவம் *[sex is a sin]* என்று போதித்தது. எனவே அங்கு வழிபடப்பட்ட பெருங்கடவுளர் அனைவரும் பாவத்தின் சின்னங்களாகிவிட்டனர்.

## இந்திரனுக்கு உரியவை

இந்திரன் குறித்து நிறைய தகவல்கள் புராணங்களில் சொல்லப்பட்டுள்ளன. இந்திரன் தேவர்களின் தலைவன் ஆவான்; அவனுடைய



உலகம் இந்திரலோகம் எனப்படும். இந்திரன் என்பது ஒரு மனிதனை அல்லது ஒரு தெய்வத்தை குறிப்பிடும் பெயரல்ல. அது ஒரு பதவி, பொறுப்பு [பெண்ணைத் தாயாக்கும் பொறுப்பு] அல்லது தகுதி ஆகும். இடி, ஈட்டி, அம்பு, மாயவலை ஆகிய நான்கையும் தன் கைகளில் கொண்டிருப்பவன் இந்திரன் ஆவான். இவனுடைய நகரம் அமராவதி. இந்நகரம் இப்போது இக்போ மொழி பேசும்

நைஜீரியா நாட்டில் இருப்பதாக அண்மையில் கண்டுபிடித்துள்ளனர். இவனுடைய ஆயுதம் வஜ்ராயுதம், வாகனம் வெள்ளை நிற யானை ஐராவதம்; மற்றும் வெள்ளை நிறக் குதிரை உச்சைஸ்ரவஸ். இவனுடைய மலை மந்திர மலை ஆகும். இம்மலை ஆதியில் குமரி கண்டத்தில் தற்போது குமரி மாவட்டத்தில் இருப்பதாகவும் கூறுகின்றனர். இதனாலும் இவன் தமிழ்க் கடவுளாக ஆதியில் வழிபடப்பட்டவன் என்று கருதுகின்றனர்.

இந்திரன் எழுதிய இலக்கண நூல் ஐந்திரம் எனப் போற்றப்பட்டது. இதுவே அகத்தியம் மற்றும் தொல்காப்பியத்துக்கு முதல் நூலாக விளங்கிற்று. இடி இவனது கொடியாகவும், காமதேனு இவனது பசுவாகவும், 64 கலைகளில் ஒன்றான மாயாஜாலம் இவனது கலையாகவும், நன்னாரி இவனது பாசமாகவும், வானவில் இவனது வில் ஆகவும், கிழக்கு இந்திரனின் திசையாகவும் சொல்லப்படுகிறது. ஊர்களில் தேவேந்திரர் வேளாளரும் இந்திரனின் திசையான கிழக்கில் உள்ள கிழக்குத் தெருவில் தான் குடியிருக்கின்றனர். இவர்கள் இல்லாத நகர்ப்புற ஊர்களில் கிழக்குத் தெருவில் முதலியார் குடியிருக்கின்றனர். கேட்டை இந்திரனது நட்சத்திரமாகவும், வெண்தோன்றி மலர் இந்திரனின் பூவாகவும், பொதியமலையில்

கிடைக்கும் மஞ்சள் நிற சந்தனம் இந்திரனுக்குப் பிரியமான மணப்பொருளாகவும் கருதப்பட்டது.

இந்திரனுக்கு உரிய தாவரம் பிரண்டை அல்லது முடக்கத்தான் என்பர். இலக்கியங்களில் அவனுடைய வாகனம் மேகம் என்று வருணிக்கப்படுகிறது. அவனுடைய மனைவி இந்திராணி. அவனுக்கு அர்ச்சுனன், ஜெயந்தன், வாலி என மூன்று மகன்கள் ஆவர். தெய்வயானை என்ற இந்திரனின் மகளை முருகன் திருமணம் செய்தான். இந்திரன் விரும்பிச் சூடுவது கற்பக மலராகும். இந்திரனது அணி சிந்தாமணி எனப்பட்டது அவனுடைய மேகங்கள் எண்ணிக்கையில் ஏழு. அவை சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தா, துரோணம், காளமுகி, நீலவருணம் ஆகியன.

## இந்திரனின் பண்புகளும் பெயர்களும்

இந்திரனுக்கு வழங்கும் பல பெயர்கள் அவனது முக்கியத்துவத்தையும் அதிகாரத்தையும் செல்வாக்கையும் உணர்த்துகின்ற காரணப் பெயர்களாகும். அவனை அமராவதியோன், சதமகன், கோபதி, போகி, விண்முழுதாளி, வாசவன், வானவன், கௌசிகன், வெள்ளைவாரணன், பொன் நகர் செல்வன், வேந்தன், சுவர்க்கன், சக்கிரன், புரந்தரன், சங்கிரந்தனன், பாக சாதனன், என்று பல பெயர்களால் அழைத்தனர். மேலும் நல்ல மூக்கை உடையவன்

என்ற பொருளில் சுநாசி என்றும் ஊரும் சுனை நீர் போன்றவன் என்ற பொருளில் சுனா என்றும் இசையின் நாயகன் என்ற கருத்தில் சுதீப் என்றும் வித் ஓஜஸ் உடையவன் என்ற பொருளில் விதோஜஸ் என்றும் அழைக்கப்பட்டான். அமரர்களின் தலைவன் என்பதால் அமரேஷ், உண்மையின் கடவுள் என்பதால் சச்சின், சிறந்த சந்நியாசி என்பதால் யதிந்திரன், கோட்டைகளைத் தகர்த்தவன் என்பதால் புரந்தரன் என்றும் குறிக்கப்பட்டான். இந்திராணியின் பெயராலும் சசிபதி, சசி பிந்து சசி மணாளன் என்றும் அழைக்கப்பட்டான். சசி என்ற பெயர் இந்து சமயத்தில் இந்திரனின் மனைவி இந்திராணியைக் குறித்தது.

## குடும்பனும் குடும்ப அமைப்பும்

விளை நிலத்தின் தலைவனாகவும் தந்தையே தலைவனாக விளங்கும். குடும்ப அமைப்பின் தோற்றுவாயாகவும் விளங்கியதால் இந்திரனை வேந்தன் என்ற பெயரில் குறிப்பிடுவதும் உண்டு. நதிக்கரை நாகரிகத்தின் தலைவன் வேந்தன் அல்லது இந்திரன் ஆவான். இவனை மருத நிலத் தெய்வமாக போற்றுவதால் மருதக் கிழவோன் என்று தமிழிலக்கியங்கள் சுட்டுகின்றன. தொல்காப்பியம் மருத நிலத்திற்கு தலைவனாக வேந்தன் என்பவனை சுட்ட பதினோராம் நூற்றாண்டிற்குப் பிறகு அவனே இந்திரன் என்று அழைக்கப்பட்டான்.

குடும்பத்தினை உருவாக்கிய குடும்பன்மார், பின்னர் குடும்பம் குடும்பமாக பல குடும்பங்கள் சேர்ந்து ஒரு சமுதாயமாக வாழும் போது வேந்தனாக உயர்ந்தான்; அவன் சமுதாயத்தில் தேவேந்திரன் என்ற சிறப்புப் பெயர் பெற்றான் தேரும் திருவிழாவும் கோயிலும் கொண்டாட்டமும் அவனுடையதாயிற்று. இவன் தமிழ மண்ணுக்குரியவன், பிற நாடுகளில் இருந்து இங்கு படை எடுத்து வந்த பிற மொழி பேசும் மன்னர்கள் தமிழகத்தின் வேந்தன் என்ற நிலையில் இருந்து வந்த குடும்பரின் பெருமைகளைச் சிதைக்கக் கருதினர்.

சோழர் காலம் வரை வேளாண் சமூகத்தவரான தேவேந்திர சமூகத்தார் அரசின் அனைத்து மரியாதைகளையும் கோயில்களில் முதல் மரியாதைக்குரியவராக விளங்கினர். அதன் பிறகு வந்த வேற்றினத்து வேந்தர்களே இவர்களின் உயர் நிலையைக் கண்டு வெறுத்தனர். இவர்களின் நிலங்களைப் பறித்து தங்களின் மந்திரி மற்றும் சேனாதிபதிகளுக்கு வரியிலி நிலங்களாக அளித்து அவர்களுக்கு வேளாளர் என்ற 'பிள்ளைப் பட்டம்' கொடுத்து குடும்பர்களை அவர்களுக்குச் சொந்தமான விளை நிலத்தில் வேலை செய்ய வைத்தனர்.

## குடும்பப் பொறுப்பும் சமூகப் பொறுப்பும்

இந்திரனை ஆயிரம் கண்ணுடையான் என்று அழைப்பதற்கான காரணம் ஆராய்ந்தால் அவன்

ஆயிரம் பெண்களுக்கு இந்திரிய தானம் செய்தவன் என்பது புலப்படும். குழந்தைப் பேற்றில் ஆணின் முக்கியத்துவம் உணரப்பட்ட பின்பு வீரியமுள்ள ஆண்மகன் ஓர் இனத்தின் மக்களைப் பெறுவதற்குப் பெண்களுக்கு இந்திரிய தானம் செய்பவனாக தெரிவு செய்யப்பட்டான். இவன் ஓர் இனத்தின் மூத்த தாய்க்கு விந்து தானம் செய்பவன். ஆவான். இந்திராணி என்பவள் இனத்தின் மூதாயும் தலைவியும் ஆவாள். அவளுடைய தலைமைப்



பொறுப்பு அவளிடமிருந்து மாறுவதில்லை. ஆனால் அவளைக் கருவுறச் செய்யும் சிறந்த ஆண் மகனாகப் பொறுப்பு ஏற்பவனே இந்திரன் என்று அழைக்கப்பட்டான். இந்திரிய தானம் செய்பவன் இந்திரனுக்குக் காரணப்பெயராக அமைந்தது. இதனால்தான் இந்திரர்கள் மாறலாம் இந்திராணி மாறுவதில்லை என்ற வாசகம் தொன்ன்றியது. முன்னாள் முதலமைச்சர் ஒருவர் அரசு அதிகாரிகளை பார்த்து 'நீங்கள் இந்திராணியைப் போன்றவர்கள். ஆனால் அமைச்சர்களோ இந்திரர்கள் அவர்கள் அவ்வப்போது மாறிக் கொண்டே இருப்பார்கள். உங்களின் அதிகாரத்தில் எவரும் கை வைக்க இயலாது' என்று வேடிக்கையாக சொல்லிச் சிரிப்பார்.

**இந்திராணியைக் கைப்பற்றுவதும் இந்திர லோகத்தைக் கைப்பற்றுவதும்**

பத்மாசுரனின் தங்கை அயோமுகி மூங்கில் காட்டில் ஒளிந்திருந்த இந்திராணியைக் கையைப் பிடித்து இழுத்து வர முயன்றாள். அப்போது இந்திராணிக்குக் காவலாக இருந்த மகா காலன் அயோமுகியின் கையை வெட்டித்துண்டாக்கினான். இந்திராணியைக் கைப்பற்றுவது என்பது இந்திர லோகத்தையே கைப்பற்றியதாகும். 'மருதம் தானே உழிஞையோடு புறனே' என்ற சூத்திரமும் கைப்பற்றுதல் என்னும் செயல்பாட்டையே எடுத்தியம்புகிறது. உழிஞை என்பது

முரண்பட்டவனிடம் இருந்து கோட்டையைக் கைப்பற்றுவதாகும் மருதம் என்பது ஊடல் கொண்ட பெண்ணை வசப்படுத்துவதாகும். ஆக இரண்டும் ஒரே செயல்பாட்டையே குறிக்கிறது ஆனால் களம் வேறு. ஒன்று போர்க்களம் இன்னொன்று காதல் களம். செயல்பாடு தன்னுடன் முரண்படுவதைக் கைப்பற்றித் தன்னுடைய தாக்கிக் கொள்ளுதல் ஆகும்.

## இந்திராணியின் இயல்புகளைக் காட்டும் பெயர்கள்

இந்திராணியை இந்து சமயத்தவர் சசி என்று அழைக்க பவுத்த சமயத்தவர் சுஜி எனறு அழைத்தனர். இந்து நூல்களில் இந்திராணியை அயிராணி, சசி, சுந்தரி, புலோமசை, ஐந்தருச் செல்வி எனப் பலவாறாக அழைக்கப்பட்டாள். இவள் ஆடும் கூத்து கடையம் எனப்பட்டது. இவள் பெயரால் இந்திரன் சசி பதி என்றும் சசி மணவாளன் என்றும் அழைக்கப்பட்டான்.

இந்திராணியின் இருப்பிடமாக மகேந்திர மலை கருதப்படுவதால் இந்திரனுக்கும் உரிய மலை மகேந்திர மலை என்றாயிற்று. இதனால் இந்திராணியை மகேந்திரா என்றும் இந்திரனை மகேந்திரன் என்றும் அழைக்கின்றனர். இவள் தேவலோகத்தின் அரசியாக கருதப்படுவதால் சாம்ராஜ தாயினி எனப்படுவாள். இவள் நவரத்தின கிரீடமும் யானை வாகனமும் கொண்டவள்.



இந்திராணி

இவளுக்கு சம்பங்கியும், மரிக்கொழுந்தும் வைத்து பூஜை செய்வது வழக்கம். இவள் தன்னுடன் வந்து இணைந்த ஆணுக்கு இந்திரபதவி கொடுப்பவள் என்பதால் இவளை வணங்குவோர் உயர் பதவி பெறுவர் என்பது இந்து சமய நம்பிக்கை. பல ஆரோக்கியமான

வலிமையான பிள்ளைகளை பெற்றெடுக்கும் சிறந்த தாய் என்பதால் இவளை வணங்குவோர் விரைவில் திருமணம் நடந்து நல்ல குழந்தைப் பேறும் அடைவர். இத்தகைய நம்பிக்கையுடன் இந்திராணி வணங்கப்படுகிறாள். சப்த மங்கையரில் ஒருவராகவும் இந்திராணி கருதப்படுகிறாள்.

## தேவேந்திரனுக்குத் தமிழகத்தில் ஒரு கோயில்

பௌத்தர்களும் சமணர்களும் தேவேந்திரனைத் தெய்வமாக போற்றிட இந்து சமயத்தில் ரிக்வேதத்தில் மழை கொண்டுவரும் பெருந்தெய்வமாப் போற்றப்பட்டவனை ஆரியர் பெண் பித்தன் என்று கதை கட்டி அவனுக்கு எங்கும் கோவில் இல்லாமல் செய்ததோடு பழைய கோவில்களையும் சிவன் கோயில்களாக்கி விட்டனர். அல்லது சிதைத்து விட்டனர். இருப்பினும் பௌத்தம் செழித்து வளர்ந்த கேரள மாநிலத்தின் திருவாங்கூர் சமஸ்தானத்தின் விளங்கிய கன்னியாகுமரி மாவட்டத்தில் மருத்துவாழ் மலைக்குப் பின்புறத்தில் ஒரே ஒரு கோயில் தேவேந்திரனுக்கு இன்றும் இருப்பதைக் காண்கிறோம். இக்கோவில் ஒரு குகைக்கோவிலாக இருப்பதால் இதனை தேவேந்திரன் பொத்தை என்று அழைக்கின்றனர்.



*இந்திரன் பொத்தை குகைக்கோவில்*

இந்திரனின் கோவில் தரை மட்டத்திலிருந்து 360 அடி உயரத்தில் காணப்படுகிறது. குகைக்குள் புடைப்புச் சிற்பமாக இந்திரன் கைகூப்பி நிற்கின்றான் அவனுடைய இரண்டு கரங்கள் கைகூப்பி வணங்கிய நிலையில் உள்ளன. அடுத்த இரண்டு கரங்களில் ஆயுதம் ஏந்தியிருக்கிறான். அருகில் சிவவாக்கியர், சித்தர், பார்வதி அம்மன் புடைப்புச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

தேவேந்திரப் பொத்தையில் உள்ள தீர்த்தம் ஔடத தீர்த்தம் என்ற பெயரில் மக்களுக்கு மருந்தாக விளங்குகின்றது. அவனது தேர் நின்ற இடம் தேரூர் எனப்படுகிறது. தான் பூஜை செய்வதற்கு ஓடு நீராக நதிநீர் வேண்டும் என்று



*இந்திரன் பொத்தை குகைக்கோவில் சிற்பம்*

இந்திரன் கேட்டதனால் அவனது வெள்ளை யானை தனது தந்தத்தால் [கோடு என்றால் தந்தம்] தரையில் குத்தி நதியை உருவாக்கிற்று. அதுவே கோட்டாறு எனப்பட்டது

**இந்திரனின் ஈஸ்வர வழிபாடு**

இந்திரன் நிற்கும் திசையிலிருந்து நோக்கினால் தாணுமாலய சுவாமி கோபுரம் தெரிகின்றது. எனவே இந்திரன் இங்கிருந்து

தாணுமாலயன் கோவிலில் இருக்கும் ஈஸ்வரனைத் தரிசிப்பதாக சொல்லப்படுகிறது. இவன் இங்கு வந்து சாபம் தீரப் பெற்றதாகவும் கதை திரித்து விட்டுள்ளனர். சுசீந்திரத்தில் உள்ள தாணுமாலயன் கோவிலிலும் இந்திரன் வந்து சிவ வழிபாடு செய்வதாக நம்பப்படுகிறது. இதனைப் பிறர் அறியக் கூடாது என்பதனால் இரவுப் பூசை செய்த பூசாரி மறுநாள் காலைப் பூசைக்கு வரமாட்டார். அவரே வந்தால் இரவில் இந்திரன் வந்து பூஜை செய்ததைக் கண்டுபிடித்து விடுவார் என்பதால் மறுநாள் காலை வேறு பூசாரியைக் கொண்டு பூசாரி பணி செய்யும்படி நியமித்துள்ளனர்.

## பூப்படையவும் குழந்தை பெறவும் இந்திர வழிபாடு

தேவேந்திரன் பொத்தை என்ற குகைக் கோயிலில் பெண்கள் தொடர்பான வழிபாடுகள் நேர்ச்சைகள் சிறப்பாக நடை பெறுகின்றன. இந்திரன் விந்து தானம் செய்யும் தெய்வமெனப் படுவதால் இங்குக் குழந்தை வரம் கேட்டு வருவோர் அதிகம். அவர்கள் தமக்கு ஆண் குழந்தை பிறந்தால் இந்திரன் என்றும் பெண் குழந்தை பிறந்தால் தெய்வயானை என்றும் பெயர் சூட்டுகின்றனர். பூப்படையாத பெண்களும் கூட இந்திரனை வேண்டிக் கொண்டாள் விரைவில் பூப்படைந்து குழந்தை பெறும் தகுதியைப் பெறுவதாகவும் நம்புகின்றனர். இந்திரனுக்கு

வலப்புறத்தில் காயத்ரி அம்மனுக்கு என்று ஒரு தனிச் சந்நிதி இருப்பதும் குறிப்பிடத்தக்கது.

## இந்திராணிக்கு இருந்த கோயில்கள்

சைவ சமய எழுச்சி காலத்தில் இந்திரனுக்குக் கட்டப்பட்டிருந்த கோயில்கள் எல்லாம் சிவன் கோயிலாக மாற்றப்பட்டு இந்திரன் சாபம் தீர்க்கப்பட்ட தலங்கள் ஆயின. இவ்வாறு தலபுராணங்கள் உருவாக்கிய பிறகும் கூட இந்திரனுக்கு என்று ஒரே ஒரு கோயில் இருப்பதைப் போன்று இந்திராணிக்கும் தமிழகத்தில் ஒரு கோயில் உள்ளது. அதுவும் சிவன் கோயில் தான் என்றாலும் இந்திராணி பெயரால் அழைக்கப்படுகிறது. இக்கோயில் அய்யம்பேட்டைக்கு அருகில் தாழமங்கை என்ற ஊரில் உள்ளது. இக்கோயில் சப்த மங்கை ஸ்தலமாக விளங்குகிறது. கருவறையில் சிவலிங்கமே வைக்கப்பட்டுள்ளது. தாழமங்கை என்பது இந்திராணியின் பெயர்களில் ஒன்றாகும். அவளுடைய மிச்ச சொச்சமாக இங்கு துர்க்கை 18 கரங்களுடன் காட்சியளிக்கின்றாள். இறைவனின் பெயர் தாழமங்கை சந்திரமவுலீஸ்வரர் ஆகும்.

நாகப்பட்டினம் அருகே தருமபுரம் என்ற ஊரில் தருமரும் இந்திரனும் வழிபட்ட தாழமங்கை சந்திரமவுலிசுவரர் கோயில் உள்ளது. தாழமங்கை என்பது இந்திராணியைக் குறிக்கும்.




நாகப்பட்டினம் என்பது ஆதியில் பவுத்த ஸ்தலம் ஆகும். பவுத்த துறவிகள் மனிதருக்கும் விலங்கு மற்றும் பறவைகளுக்கும் மருத்துவமனை கட்டி சிகிச்சை செய்து வந்த இடமாகும். இவர்கள் இந்திரனையும் இந்திராணியையும் வழிபட அருகில் நிறைய கோயில்களைக் கட்டினர். திருச்சி தஞ்சை மாவட்டங்களில் காணப்படும் இக்கோயில்கள் அனைத்தும் தற்போது சைவத் தலங்களாக மாறி விட்டாலும் கூட இறைவனின் பெயர் இந்திரனின் பெயரால் கண்ணாயிர நாதன் என்று வழங்கப்படுவதைக் காணலாம். கண்ணாயிரம் என்பது இந்திரன் பல பெண்களைக் கருத்தரிக்க வைத்தவன் என்று பொருள் தருவதாகும்.

## தந்தை - இந்திரன் - குடும்பன் - வேந்தன்

இந்திரனும் இந்திராணியும் குடும்பம் என்ற அமைப்பை நினைவூட்டுகின்றனர். ஒரே ஒருவனின் விந்துவை மட்டுமே பெற்று பிள்ளைகளைப் பெறும் ஒரு தாய் என்ற கருத்து இங்குக் கூர்ந்து நோக்கத்தக்கது. இந்திரிய தானம் செய்பவன் அவனுக்குப் பிறக்கும் அனைத்து குழந்தைகளுக்கும் தந்தை எனப்படுவதால் தந்தை என்ற உறவு முதன்மை படுத்தப்படுகிறது. உறவின் முதன்மையும் மேன்மையும் சிறிய அளவில் குடும்பம் என்றும் பெரிய நிலப்பரப்புக்கு உடையதாக இருக்கும்போது வேந்தன் என்றும் மாறுகிறது. குடும்பத்தின் தலைவன் குடும்பன். குடும்பம் என்ற அமைப்பை அறிமுகம் செய்தவன் குடும்பன். இவனுக்குப் பிறக்கும் குழந்தைகள் அவனுடைய வழித்தோன்றல்கள் ஆவர்.

## விளைச்சல் - சேமிப்பு - பிள்ளை - சொத்து

மார்க்ஸ் ஏங்கெல்ஸ் ‘தனிமனிதன் குடும்பம் சொத்து’ என்ற நூலில் குடும்பத்தின் தோற்றம் பற்றி குறிப்பிட்டுள்ளார். குடும்பம் என்பது நிலவுடைமைச் சமுதாயத்தில் சொத்துக்களைப் பாதுகாப்பதற்கான ஒரு அமைப்பு. தமிழகத்தில் குடும்பம் என்ற அமைப்பு சொத்துக்களைப் பாதுகாக்கும் அமைப்பு என்று கருதப்படாமல் பண்பாட்டு அடிப்படையில் சிறப்பானதாகக் கருதப்பட்டது. குடும்பம் என்பது ஆரோக்கியமான சமுதாய வாழ்க்கைக்குரிய

அடிப்படை அலகு ஆகும். பல குடும்பங்கள் இணையும்போது சமுதாயம் தோன்றுகிறது.

**நில மகளும் குலமகளும்**

குடும்பன் என்பவன் தனக்கான உணவைத் தயாரிக்கும் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டவன்; அரும்பாடுபட்டு உற்பத்தி செய்து தான் சேமித்து வைக்கும் தானியத்தை தனக்கு உரிமைப்பட்டவர்கள் மட்டும் பயன்படுத்த வேண்டும் என்று கருதினான். தன்னுடைய உழைப்பை அதனால் கிடைத்த பலனை தனக்குப் பிறகு தனது இரத்த சொந்தங்கள், தனக்குப் பிறந்த பிள்ளைகள், பிள்ளைகளின் பிள்ளைகள் பயன்படுத்த வேண்டும் என்ற சிந்தனையே குடும்பம் என்ற அமைப்பை தோற்றுவித்தது. இதற்கு அடிப்படையாக மூலகாரணமாக இருந்தது நிலம் மற்றும் வேளாண்மை ஆகும். வேளாண் தொழிலில் ஈடுபடுவதற்காக தனக்குரிய நிலத்தை வேலியிட்டு அடைத்த வேளாளன், அந்நிலத்தின் பலனை அனுபவிக்க தனக்குரிய பிள்ளைகளைப் பெற்றுத் தரக்கூடிய பெண்களுக்கு தன்னுடைய மனைவி மற்றும் தன் குடும்பத் தலைவி என்ற தகுதியை அளித்தான்.

**குடும்பத் தலைவியும் மக்கட்பேறும்**

வேளாண் தொழில் செய்யும் குடும்பங்களில் குடும்பத் தலைவி என்ற தகுதி ஒரு சமுதாயத்தின்

உயர்ந்த தகுதியாக பெண்களுக்கு வழங்கப்பட்டது. நிரந்தரமாக நதிக்கரைகளில் தங்கி ஓரிடத்தில் நிலத்தை வேலியிட்டு வேளாண்மை செய்து அதன் பலனை தன் மக்களுக்கு தரவேண்டும் என்று கருதி மனைவி மக்களை குடும்பம் என்ற அமைப்பை உருவாக்கிய குடும்பன். புதல்வரைப் பெறுதல் என்ற தகுதியை மனைவி என்ற தகுதி உடைய பெண்களுக்கு மட்டுமே அளித்தான். எனவேதான் சங்க இலக்கியத்தில் மருதத் திணையில் தலைவி, புதல்வர் பெறுதல் என்ற தகுதியை பெற்றவளாகவும், பரத்தை எனப்படும் மற்ற பெண்கள் சமுதாயத்தால் குழந்தை பெறும் தகுதி வழங்கப்படாதவராகவும் இருந்தனர்.

### வீர விளையாட்டுகள்

குடும்பங்களின் பாதுகாப்புக்குரிய நிலத் தலைவனாகவும் வீரத்தலைவனாகவும் விளங்கிய ஒருவனே வேந்தனாக உருவானான். பாதுகாப்பு என்பது இவர்கள் பொறுப்பானதும் இச்சமூகத்தார் ஒய்வு நேரங்களில் வீர விளையாட்டுக்களில் ஈடுபட்டனர். சிலம்பம், மல்யுத்தம், ஜல்லிக்கட்டு, மாட்டுவண்டி பந்தயம் போன்றன இவர்களின் விருப்ப விளையாட்டுக்கள் ஆயிற்று. மல்லுக்கட்டு என்று அழைக்கப்பட்ட விளையாட்டில் வெறுங்கையுடன் மோதி எதிரியை வீழ்த்தும் வீர விளையாட்டில் வேளாண்



சமுதாய மக்கள் சிறந்து விளங்கியதால் இவர்கள் மல்லர்/மள்ளர் எனப்பட்டனர். குடும்பத்தைப் பாதுகாக்கவும் நாட்டை பாதுகாக்கவும் இவர்கள் வீரர்களாகவும் துணிச்சல் மிக்கவர்களாகவும் விளங்கினர்.

## வேந்தனும் வேலியும் கோட்டையும்

வேந்தன் எனப்பட்ட குடும்பர் சமூகத் தலைவன் குறிப்பிட்ட நிலப்பரப்பின் தலைவனாகவும் ஊர்களின் உடமையாளனாகவும் விளங்கினான். குறிப்பிட்ட நிலத்தில் வாழும் பல குடும்பங்களுக்குக் காவலனாகவும் அவர்களைப் பாதுகாக்கும் அரணாகவும் திகழ்ந்தான். வயலுக்கு வரப்பும் தோட்டத்துக்கு வேலியும் வீட்டுக்குக் காவல் சுவரும்



ஊருக்குக் கோட்டை சுவரும் பாதுகாப்பு அரண்கள் ஆயின. கோட்டையைக் காப்பாற்றுவது உழிஞைத் திணை என்றால் வீட்டை காப்பாற்றுவது மருதத்திணை ஆயிற்று ஒவ்வொரு குடும்பமும் பாதுகாப்பான வேலியிட்ட வீடுகளில் வசிக்கவும், வீடுகள் வரிசை வரிசையாக அமையவும், அங்கு வசிக்கும் மக்கள் அவர்களுக்குத் தேவையான வேளாண் தொழில் தவிர்த்த பிற தொழில்களைச் செய்யும் தொழிற்பேட்டைகளை அருகில் அமைக்கவும், வேந்தன் மூல காரணமாக இருந்தான்.

## மதுரை அருகே ஆதனும் ஆதம்மா வழிபாடும்

மதுரை வைகை நதிக்கரையில் உள்ள கீழடி கிராமத்தில் மக்கள் குடும்பமாய் வரிசையாய் வாழ்ந்த வீடுகளும் தொழிற்பேட்டையும்

அகழ்வாராய்ச்சியின் மூலம் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இங்குக் கிடைத்த பானை ஓடுகளில் காணப்படும் ஆதன் என்ற பெயர் இங்கு வசித்தவர்கள் குடும்பர் என்பதை உறுதி செய்யும் வகையில் இவ்வூருக்கு அருகில் உள்ள பல கிராமங்களில் அவர்கள் ஏராளமாக வசிக்கின்றனர். மேலும் அவர்களின் குலதெய்வமான ஆதம்மா வழிபாடும், ஆதன் என்று பெயர் சூட்டும் வழக்கமும் இங்கு இருந்து வருவதைக் காண்கிறோம்.

**தேவேந்திரன் என்ற சிறப்புப் பெயர் ஏன்?**

புராண இதிகாசங்களில் அசுரர் எனப்படுவோர் கெட்டவர் என்றும் சுரர் [தேவர்கள்] என்போர் நல்லவர் என்றும் அறியப்பட்டனர். நல்லவர்கள் என்று நம்பப்பட்ட தேவர்களின் தலைவனான இந்திரன் சுரேந்திரன் என்றும் தேவேந்திரன் என்றும் அறியப்பட்டான். சுரேந்திரன் என்ற பெயரை மலையாளிகள் அதிகம் பயன்படுத்தினர். தேவேந்திரன் என்ற பெயரை தமிழகத்தின் வேளாளர்கள் தம்முடையதாக்கிக் கொண்டனர். தமிழ் வேளாண் சமூகத்தவர் தனது சமூகத்தை தேவேந்திர வேளாளர் குலம் என்று குறிப்பிட்டனர். இடைக்காலத்தில் வேறு பல சமூகத்தவரும் வேளாளர் என்று அழைக்கப்பட்டாலும் நெல் வேளாண்மை செய்தவர்கள் தேவேந்திர வேளாளர் என்று

சிறப்பு அடைமொழியுடன் அழைக்கப்பட்டனர். இவர்களுக்கு கோவில்களில் தேர் இழுக்கும் உரிமை சிறப்புத் தகுதியாக வழங்கப்பட்டது.

நெல் வேளாண்மைக்கெனத் தோன்றிய பள்ளு இலக்கியங்களின் தலைமக்கள் இம்மக்களே ஆவர். "யார் தொட்டாலும் தேர் ஓடாது. எவர் தொட்டாலும் தேர் ஓடாது. தேருக்கு உகந்தவன் தேவேந்திரன் தொட்டால் மட்டுமே தேர் ஓடும்" இவ்வழக்காறு கோயில்களில் இவர்களுக்கு உரிய சிறப்புத் தகுதியைக் குறிப்பதாக அமைந்தது. இப்பாடல் தமிழகமெங்கும் பிரசித்தி பெற்றதாகும். இச்சமூகத்தவருக்குச் சிறப்பு உரிமைகள் இருந்தவற்றை பழனி கோயில் கல்வெட்டுக்களில் காண்கிறோம்.

**வேளாண் பணிகளில் சிவனும் பார்வதியும்**

தமிழகத்தின் கடவுளர்களில் பெருங் கடவுளாக விளங்கும் சிவபெருமான் தன் மனைவியுடன் வந்து வேளான் பணியில் கலந்துகொள்வதாக கோவை பட்டீஸ்வரம் கோவிலில் விழா கொண்டாடப்பட்டது, தல புராணமும் உருவாக்கப்பட்டது. தேவேந்திர வேளாளரே கொங்கு நாட்டுப் பகுதிக்கும் நெல் வேளாண்மையை அறிமுகம் செய்தவர் ஆவர். தமிழகத்தில் பொதுவாக தவசி எனப்படும் சிறு

*தானியமே முக்கிய உணவாக இருந்தது. தவசியை சமைப்பதால் தான் சமையல்காரர் ‘தவசி பிள்ளை’ என்று அழைக்கப்பட்டனர். நெல் தேவேந்திர சமூகத்தார் மட்டுமே அறிந்த விவசாய அறிவியலாக இருந்தது.*

*கொங்கு நாட்டில் நெல் விவசாயத்தை அறிமுகப்படுத்திய தேவேந்திர சமூகத்தாருக்குச் சிறப்புத் தகுதி வழங்கும் நோக்கில் அவர்களைக் கவுரவப்படுத்தும் வகையில் கோவை பட்டீஸ்வரம் கோயிலின் சுவாமி கதையும் விழாவும் இன்றுவரை நடைமுறையில் உள்ளன. சிவனும் பார்வதியும் நெல் நடவு செய்வதற்காகப் பள்ளனாகவும் பள்ளியாகவும் வடிவெடுத்த புராணம் பள்ளுப்படலம் எனும் பெயரில் தேரூர்ப் புராணத்தில் இடம்பெற்றுள்ளது. இந்நிகழ்வை இங்கு வாழும் தேவேந்திர சமுதாயத்தினர் “நாற்று நடவுத்திருவிழா” என்று ஆண்டுதோறும் கொண்டாடுவது குறிப்பிடத்தக்கது.*

# பள்ளு இலக்கிய வகைகள்




"நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு கையை எண்ண முடியாது" என்று சொல்லுமளவிற்குப் ள்ளு நூல்கள் நிறையக் காணப்படுகின்றன. வ்வகையில் பள்ளு நூல்களின் பெயர்களில் சில ருமாறு:

திருவேட்டை நல்லூர் அய்யனார் பள்ளு
எட்டையபுரப் பள்ளு
மக்காப் பள்ளு
அகத்தியப் பள்ளு
வேதாந்தப் பள்ளு
தென் புதுவைப்பதி தேவாங்கப் பள்ளு
ஈரோடை ஐயனாரப்பன் பள்ளு நாடகம்
சாமிநாதப் பள்ளு
முக்கூடற் பள்ளு
. மோரூர் நல்ல புள்ளியம்மன் பள்ளு
மாந்தைப் பள்ளு
. வைசியப் பள்ளு
. வேளாளர் பள்ளு
. மோகனப் பள்ளு
. முதலிகாமிண்டன் பள்ளு
. போரூர்ப் பள்ளு
. போடிநாயக்கனூர்ப் பள்ளு
. பெருநாழி வில்லியணைத் தேவர் பள்ளு
. புதுவைப் பள்ளு
). நெ[illegible]லைப் பள்ளு
[illegible]ன் கோட்டைப் பள்ளு

22. தென்காசிப் பள்ளு
23. தில்லைப் பள்ளு
24. திருவிடைமருதூர்ப் பள்ளு
25. திருப்புனவாயிற் பள்ளு
26. திருப்புடைமருதூர்ப் பள்ளு
27. நீலகண்டன் பள்ளு
28. திருச்செந்திற் பள்ளு
29. திருச்சுழியற் பள்ளு
30. திருக்கோட்டியூர்ப் பள்ளு
31. தியாகராசர் பள்ளு
32. தரமசாத்தா பள்ளு
33. தஞ்சைப் பள்ளு
34. ஞானப் பள்ளு (கிறித்துவம்)
35. ஞானசித்தர்ப் பள்ளு
36. பரிமேலழகர் பள்ளு
37. சேற்றூர்ப் பள்ளு
38. சேமூர்ப் பள்ளு
39. சீரங்கராயன் பள்ளு
40. சீகாழிப் பள்ளு
41. சிவகயிலைப் பள்ளு
42. சிவகங்கை மருதப்பன் சேர்வைகாரர் பள்ளு
43. சாத்துடையான் பள்ளு
44. சங்கிலி வீரபாண்டிய வன்னியனார் பள்ளு
45. கொமுடிப் பள்ளு
46. கொடுமளூர் முருகன் பள்ளு
47. கன்னிவாடி ஜமீன்தார் பள்ளு
48. கழுகுமலைப் பள்ளு
49. ஏம்பல் முதலியார் பள்ளு
50. ஏசற் பள்ளு
51. உரிமைநகர்ப் பள்ளு
52. இளசைப் பள்ளு
53. இரும்புலிப் பள்ளு
54. இராசைப் பள்ளு
55. அம்பலப் பள்ளு

<u>பதிப்பும் விபரமும்:</u>

பத்தொன்பது பள்ளு நூல்களின் பதிப்புத் தொடர்பான விபரங்கள் வருமாறு அமைகின்றன.

<u>1. திருவாரூர்ப் பள்ளு:</u>

கமலை ஞானப் பிரகாசர் இதன் ஆசிரியர் இதனைப் பதிப்பித்தவர் சோமசுந்தர தேசிகர் ஆவார் பதிப்பித்த ஆண்டு 1938. இப்பள்ளு ஞானப்பள்ளு என்றும் பெயர் பெற்றுள்ளது. மொத்தம் 72 பாடல்கள் உள்ளன. இதனையே பள்ளு நூல்களி

## பழனிச் செப்பேடு(கி.பி.1528)
## அடையாளப்படுத்தும் நெல் வகைகள்

1. சூத்த நாராயணன்
2. முழரி
3. கரும்பொன்
4. விண்ணவராயன்
5. சேர்ந்தமுத்தான்
6. ஈசம்பதியான்
7. இளந்தலை
8. கிழவன்
9. இன்பமாதாரி
10. விந்துமாதாரி
11. ஆள்கொண்டராயன்
12. அருந்துவ குபேரன்
13. அறிவாபரணன்
14. வாறிகல்லுண்டை
15. பாகம்பிரியான்
16. தாகம்தீர்தான்
17. இருப்புலத்தை தவிர்த்தான்
18. ஈசாகினியான்
19. மச்சமுறிச்சான்
20. மகிழம்பூ
21. வாசகன்
22. குழியிடித்தான்
23. கோதும்பை
24. புன்னை
25. குறக்கொடி
26. வாலன்
27. பாக்கு நிறத்தான்
28. பகங்குலை வாழை
29. ஊனுக்கினியான்
30. உமியில்லா வாசகன்
31. வில்லக்காய் மேனியன்
32. மழிமுடக்கி
33. வள்ளவாய் காத்தான்
34. மூங்கில் நிறத்தான்
35. மயல்க் கன்னி
36. கயல் கன்னி
37. மொட்டுசென்னி
38. புளியிட்ட சாதனன்
39. புன்னை நிறத்தான்
40. வட்ட கன்னி
41. மாதுள கன்னி
42. குங்கும கன்னி
43. கோமள கன்னி
44. மல்லிகை
45. சுந்தரி
46. பரிமள சம்பா
47. செண்பக மாலை
48. உள்பக சம்பா
49. [illegible] சம்பா
50. வெள்ளானை வேந்தன்
51. வழுதடி சம்பா
52. எலிவால் சம்பா
53. இலுப்பை பூ வாசகன்
54. மாபூ வாசகன்
55. ராச வெள்ளை
56. காக்கை சம்பா
57. புனுகு சம்பா
58. பேரில்லா
59. வெள்ளை
60. மண்வாரி புன்னை
61. கதம்பை நிறத்தான்
62. ஆள்ளொட்டி
63. மசபுளுதீ நீறச்சாரை
64. நெடுஞ்சாரை
65. காடை கழுத்தான்
66. கற்ப்பூற வாசகன்
67. செம்மஞ்சள் வாறி
68. பறக்கும் சிறுக்குருவி
69. செம்மோடன்
70. கருமோடன்
71. ராவாணன்
72. சேர வளநாடான்
73. வைகை வளநாடான்
74. சோதி குறும்பை
75. தூய்ய மல்லிகை
76. கிழிமூக்கு வளைத்தான்
77. திரிகத்தை
78. மணிக்கத்தை
79. செவ்வெளநீர் வாசகன்
80. வாழைப்பூ வாசகன்
81. தாளை விழுந்தான்
82. கொடைக்கினியாசி
83. சிறுமிளகி
84. பெருமிளகி
85. கருமிளகி
86. செம்மிளகி
87. வெள்ளை மிளகி
88. பில்லை மிளிகி
89. சந்தணமிளகி
90. சடைமிளகி
91. மட்டிமி குறுவை
92. மணிகுறுவை
93. செங்குறுவை
94. கருங்குறுவை
95. பணமுகரி
96. கயிலைப் பதியான்
97. வைகுண்டபதியான்
98. அமராபதியான்
99. அற்புதபறணன்
100. அழகியவாளன்



## இந்நூலைப்பற்றி :

தேவேந்திரன் என்ற இந்நூலின் செல்நெறி தேவகால இந்திரன் வேறு: தமிழகத்தில் மருதநிலக் கடவுளான வேந்தனான தேவேந்திரன் வேறு என்பதை பல ஒப்பீட்டுக் கருத்துக்களின் வழி புலப்படுத்துகின்றது. அதிலும் குறிப்பாக மருதநில உழவரான தேவேந்திரன் குல வேளாளர்களின் முதன்மைக் கடவுளாக தேவேந்திரன் எவ்வாறு விளங்கினான் என்பதை இன்றைய கீழடி ஆய்வு வரை சான்று காட்டி விளக்கியிருப்பது இந்நூலின் தனித்த சிறப்பு ஆகும். இந்நூல் தேவேந்திரன் பற்றிய பல சுவையான செய்திகளை உலகளவில் திரட்டிச் சொல்லியிருக்கிறது. இந்நூலில் இடம்பெற்றுள்ள படக்காட்சிகள் வாசிப்போரின் சிந்தனையை வளப்படுத்தும் தன்மையுடையதாக இருக்கின்றன. . . . .

இந்த நூல் “தேவேந்திரன்” எனும் மருதநிலக் கடவுள் பற்றிய ஒரு சிறந்த ஆய்வு நூல் ஆகும். இதில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு கருத்தும் ஒரு தனித்த நூலாக எழுதப்படும் அளவுக்கான தகவல்களைக் கொண்டு விளங்குகின்றன. ..

**முனைவர் தே. ஞானசேகரன்**
பேராசிரியர் மற்றும் தலைவர், தமிழ்த்துறை,
பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர்.

₹ 150/-